


# தமிழர் நாடு

ஆசிரியர்:- கி. ஆ. பெ. விசுவநாதம்





தமிழ் நாட்டு
விஞ்ஞானத் தந்தை
**G. D. நாயுடு**



15-6-50



ஆனி இதழ்

விலை
**4**
அணா

# தமிழர் பண்ணை

சிறந்த தமிழ் வெளியீடுகள்
கிடைக்குமிடம்



## ஐந்து செல்வங்கள்

(கி. ஆ. பெ. விசுவநாதம்)



தமிழர் பண்ணை
மதுரை ரோடு - திருச்சிராப்பள்ளி.

# “ தமிழர் நாடு ”

மலர் ௨] திருவள்ளுவராண்டு - ஆனி [இதழ் ௧௧

## பொருளடக்கம்



குறிப்பு :—“ தமிழர் நாடு ”வில் வெளிவரும் பெயர்கள் யாவும் கற்பனையே. அவை எவரையும் குறிப்பிடா.

# தமிழர் நாடு

(மாத இதழ்)



**ஆண்டுக்கட்டணம்**

| | | |
|---|---|---|
| உள் நாடு | ... | ரூ. 3—0—0 |
| வெளி நாடு | ... | ரூ. 3—0—0 |
| தனி இதழ் | ... | ரூ. 0—4—0 |

"தமிழர் நாடு" நிலயம்
மதுரைரோடு, திருச்சிராப்பள்ளி.

**விளம்பரக் கட்டணம்**

| | | |
|---|---|---|
| கடைசி அட்டைப் பக்கம் | ரூ. | 50—0—0 |
| 2, 3, அட்டை உள் பக்கம் | ரூ | 40—0—0 |
| **உட்புறம்** | | |
| முழுப் பக்கம் | ரூ. | 25—0—0 |
| அரைப்பக்கம் | ரூ | 15—0—0 |
| கால் பக்கம் | ரூ | 10—0—0 |

நீடித்த விளம்பரங்களுக்கு எழுதவும்.

விளம்பரச் செயலாளர்
"தமிழர் நாடு" திருச்சி.

---

## விற்பனையாளர்க்கு!

நமது வெளியூர் விற்பனையாளர்கள் அந்தந்த மாத பில் பாக்கியை ஒவ்வொரு இங்கிலீஷ் 5 தேதிக்குள் அனுப்பி வைக்காவிடில் அவர்களுக்கு பத்திரிகை அனுப்பி வைக்கப் படமாட்டாது. இதழ்கள் அதிகமாகத் தேவையுள்ளவர்கள் ஒவ்வொரு ஆங்கில மாதம் முதல் தேதிக்குள் அறிவித்து விடவேண்டும்.

செயலாளர்,
"தமிழர் நாடு"
திருச்சி.

# தமிழ் நாடு

மானம் சிறிதென்றெண்ணி வாழ்வு பெரிதென் றென்னும்
ஈனர்க்கு உலகந்தன்னில்—கிளியே! இருக்க நிலைமை உண்டோ?

ஆசிரியர் : கி. ஆ. பெ. விசுவநாதம் — திங்கள் இதழ்

| மலர் ௨ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௧. ஆனி ௧. (15—6—50) | இதழ் ௧௧ |
|---|---|---|

## ஒழியட்டும் மந்திரிகள்!

தமிழ் நாட்டில் இனி இந்தி கட்டாய பாடமாம். இளங் குழந்தைகள் இனி முதல் வகுப்பிலிருந்தே இந்தியைக் கட்டாயம் படித்து வரவேண்டுமாம். இது கல்வி மந்திரியின் கட்டாயக் கட்டளையாம்!

நண்பர் திரு. அவினாசிலிங்கம் செட்டியார் கல்வி மந்திரியாக இருந்த காலத்தில் இந்தி மறைமுகக் கட்டாயமாக இருந்து வந்தது. அன்பர் திரு. மாதவ மேனனர் கல்வி மந்திரியாக வந்ததும் இந்தி வெளிப்படைக் கட்டாயமாக மாறிவிட்டது.

இந்தி மறைமுகக் கட்டாயமாக இருந்து வந்தபோதே அதற்கு தமிழ் நாட்டில் பலத்த எதிர்ப்பு இருந்து வந்தது. அந்த எதிர்ப்பையும் பொருட்படுத்தாது இந்தியை வெளிப் படையாகக் கட்டாய பாடமாக்கி இருப்பது ஒரு துணிச்சலான செயலேயாகும். இத் துணிவுக்குக் கல்வி மந்திரியின் தமிழ்ப் பற்றுக்குறைவோ, இந்திப் பற்று மிகுதியோ,

வடமொழியின் மீதுள்ள வெறியோ காரணமாக இருக்க வேண்டும். அல்லது தமிழ் நாட்டின் இழி நிலையோ, தமிழ் மக்களின் அரசியல் அறிவுக் குறைவோ காரணமாக இருக்கவேண்டும்.

ஆங்கில மொழியும், இந்தி மொழியும் தமிழ் நாட்டில் கட்டாய பாடமாம். தமிழ் நாட்டில் தமிழ் மொழி கட்டாய பாடமில்லையாம். வேண்டுமானால் படிக்கலாம்; இல்லாவிடில் விட்டுவிடலாம். தமிழ் நாட்டில் ஆங்கிலத்திற்கு முதல் இடம்; இந்திக்கு இரண்டாவது இடம். தமிழ் படிக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. எப்படி இந்தக் கட்டளை? எப்படி இருக்கிறது கல்வி மந்திரியின் அறிவு?

இந்தக் கட்டளை ஐரோப்பாவிலோ, ஆபிரிக்காவிலோ, பர்மாவிலோ, மலாயாவிலோ, கொழும்பிலோ, பஞ்சாபிலோ, வங்காளத்திலோ, டில்லியிலோ அல்ல. தமிழ் நாட்டில்தான் இந்தக் கட்டளை! தமிழ் மக்களுக்குத்தான் இந்த உத்தரவு! தமிழர்களுடைய வரிப் பணத்தில் சம்பளம் வாங்கி உண்டுவரும் மந்திரியாரின் கட்டளையே இது! இந்தக் கட்டளைதான் இனிமேல் தமிழ்நாட்டுப் பள்ளிகளிலுள்ள தமிழ்ப் பிள்ளைகளின் மீது ஆதிக்கம் செலுத்தப் போகிறதாம்!

இக் கட்டளைக்குத் தமிழ்நாட்டுப் பள்ளிகளும், தமிழ் நாட்டுப் பெற்றோர்களும், தமிழ்நாட்டு ஆசிரியர்களும், தமிழாசிரியர்களும், தமிழறிஞர்களும், தமிழ்ப் பெருமக்களும், தமிழ் இளைஞர்களும், தமிழ்நாட்டுத் தேசீய பக்தர்களும் கீழ்ப்படியவேண்டுமா?

கீழ்ப்படிவதானால், தமிழ்மொழி வளருமா? அழியுமா? தமிழ் நாடு சிறக்குமா? குன்றுமா? தமிழ் மக்கள் வாழ்வார்களா? அழிவார்களா? என்பதையாவது எண்ணிப் பார்க்கவேண்டாமா?

உலகின் எந்தக் கண்டத்திலாவது எந்த நாட்டிலாவது எந்த அரசாங்கமாவது 10 வயதுச் சிறுவர்களுக்கு ஒரே காலத்தில் மூன்று மொழிகளில் கல்வி பயிற்றி வரு

கிருர்களா? உலகெங்கும் காணமுடியாத இக் கொடுமை யை நாம் இத் தமிழ் நாட்டில்தானு காணவேண்டும்?

தமிழ் நாட்டில் தமிழ் மொழி வளர்ச்சியைப் பற்றி சிறிதும் கவலைப்படாமல், தமிழுக்கு முதன்மை கொடா மல், பிற மொழிகளுக்கு முதன்மை கொடுத்து, பிற மொழி களின் ஆதிக்கத்திற்குத் தமிழ் நாட்டில் வழி திறந்துவிட்டு, அதுவும் கட்டாயப் படுத்தி திறந்துவிடப்படுவதாக இருக்கு மானல் இச் செயலை ஒரு அறிவற்ற மூடச் செயல் என்று கூறு வதைத் தவிர வேறென்னவென்று கூறுவது?

கல்வி மந்திரியார் தமிழறிவற்ற ஒரு மலையாளியாக இருக்கலாம். ஆனல், அம் மந்திரி சபையில் தமிழர்களே இல்லையா? இருந்தும் ஊமைகளாய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்க் காட்சி யளிக்கிருர்களா? அவர்கள் அப் படித்தான் காட்சி யளிப்பார்கள் என்ருல், சட்டசபையில் சுழலும் விசிறிக்கு அடியில் இருந்துகொண்டு மாதச் சம்பளம்பெற்று நாட்டுத் தொண்டு செய்துவருவதாகக் கூறி வருகின்ற எம் எல் ஏக்கள், எம் எல் சீக்கள் எல்லாம் உருவாரங்களாகப் போய்விட்டார்களா?

இக் கட்டளையைக் கண்டும், யார்வீட்டிற்கு வந்த விருந்தோ? என்று வாய் மூடி மௌனமாக வாழும் தமிழர்களும் தமிழ் மக்கள்தானு? மொழி அழிய, நாடு அழியப் பார்த்துக்கொண்டிருக்கும் மக்கள் வாழ்வதை விட அழிந்து போவது நல்லது. அதற்கும் முன்னே அத் தகைய மக்களைப் பெற்றெடுத்த நாடும் மொழியும் அழிந்து போவது நல்லது.

இவை இரண்டும் அழிந்த பிறகு அழியப் போகிற இம் மந்திரிகள் எல்லாவற்றிற்கு முன்னதாக அழிந்துபோ வதே நல்லது! பின்னே அழிவதானல், அவர்களுக்காக வருந்தி அழப் போகிறவர்கள் ஒருவரும் இருக்க மாட்டார் கள். ஆதலினல், அழியட்டும் மந்திரிசபை! ஒழியட்டும் மந்திரிகள்!!



## கோவை மாநாடுகள்!

இரண்டு வாரங்களுக்கு முன்னே ஒரு வாரத்துக்குள்ளாக ஒரு ஊரில் இரு மாநாடுகள் நடைபெற்றிருக்கின்றன. முன்னது தமிழ் விழா மாநாடு. பின்னது முத்தமிழ் வளர்ச்சி மாநாடு. முன்னது தமிழ் வளர்ச்சிக் கழகச் சார்பில் நடைபெற்றது. பின்னது திராவிட முன்னேற்றக் கழகச் சார்பில் நடைபெற்றது. முன்னது தலைவர்களால் மட்டும் நடைபெற்றது. பின்னது உழைப்பாளர்கள் பலரால் நடைபெற்றது. முன்னது வடநாட்டுப் பற்றுளர்களால் நடைபெற்றது. பின்னது தென்னாட்டுப் பற்றுளர்களால் நடைபெற்றது. முன்னது ஆரியர்களின் பேச்சுக்களோடு நடைபெற்றது. பின்னது தமிழர்களின் பேச்சோடு மட்டும் நடைபெற்றது. முன்னது தமிழறிஞர்களைப் பொருட்படுத்தாது நடைபெற்றது. பின்னது தமிழறிஞர்களை வரவேற்று நடைபெற்றது. முன்னது தமிழை ஒரு திருவிழாபோல் நடத்தியது. பின்னது தமிழின் வளர்ச்சி கருதியே நடைபெற்றது. முன்னது வடமொழி, ஆங்கிலம், இந்தி முதலிய மொழிகள் கலப்பதினுல் தமிழ்மொழி வளரும் என்ற கருத்துடைய தமிழ் அபிவிர்த்தி அசோசியேஷன்வாலாக்களால் நடத்தப்பெற்றது. பின்னது பிறமொழிக் கலப்பினுல் தமிழ் கெடும் என்ற உணர்ச்சியுள்ள தமிழ் மக்களால் நடத்தப்பெற்றது.

அதிகம் கூறுவானேன். முன்னது உறக்கத்தோடு நடைபெற்ற மாநாடு. பின்னது ஊக்கத்தோடு நடைபெற்ற மாநாடு எனக் கூறலாம். என்றுலும் தமிழ் வளர்ச்சி மாநாட்டிலோ, முத்தமிழ் வளர்ச்சி மாநாட்டிலோ தமிழ்க்கொடி ஏற்றப் படாதது வருந்தத்தக்கது.

எதுஎப்படி இருப்பினும் கட்டாய இந்தியை எதிர்த்தும், தமிழுக்கு முதலிடம் கொடுக்கப்படவேண்டு மென்றும் இரண்டு மாநாடுகளும் ஒரு முடிவையே செய்திருக்கின்றன. ஆட்சியில் இருப்பவர்கள் இதற்கு என்ன செய்யப்போகிருர்கள்? என்பது தெரியவில்லை.

திரு. அவிஞசிலிங்கம் செட்டியார் அவர்களும், அவரது தமிழ் அபிவிர்த்தி அசோசியேஷன் வாலாக்களும் ஆரிய விரோதிகளோ, ஆரிய மொழி விரோதிகளோ, வட நாட்டு விரோதிகளோ, தேசத்துரோகிகளோ அல்ல. அவர்களே கூறுகிருர்கள், "இந்தியைக் கட்டாயப் படுத்துவது தவறு" என்று. இதற்கு கல்வி மந்திரி திரு மாதவமேனன் அவர்கள் என்ன பதில் கூறப்போகிருரோ தெரியவில்லை!

> "அவர் இருந்த பதவியில் தான் நான் இருக்கிறேன்; அவர் கொண்டுவந்த இந்தியைத்தான் நானும் கொண்டு வருகிறேன் என்ற பொருமையால் தான் அவிஞசியார் இப்படி எதிர்க்கிருர்."

என்று மாதவமேனன் அவர்கள் நொண்டிச் சாக்குகளைக் கூறித் தப்பிக்க நினைக்கலாம். என்றுலும் தமிழ் மக்கள் தொடுக்கப்போகிற போரில் இருந்து அவர் தப்பிக்க முடியாது என்பதை மட்டும் இப்போதே எச்சரிக்கிருேம்.

## அறிவுத்த உணவு

பிறர் அடைகின்ற மகிழ்ச்சியைப் பார்த்து மகிழ்ச்சியடையப் பழகு. அதுதான் உண்மையான மகிழ்ச்சியாகும். அதுமட்டுமல்ல, இத்தகைய மகிழ்ச்சி ஒன்றுதான் உனது வாழ்க்கையை அழகு செய்யும்

## தமிழ் மருந்துகள்

ஓரிலைத்தாமரையை அப்படியே உலர்த்தி இடித்து துணியால் வடிகட்டி பசு நெய்யில் கலந்து உட்கொண்டால் சிறுநீர் எரிச்சல் உடனே விலகிவிடும். மூன்று வேளை மருந்து போதுமானது. பத்தியம் இல்லை.

---

### உலகப் போர்!

அடுத்த சில மாதங்களுக்குள் மற்றொரு உலகப் போர் நடைபெறுமென்ற அறிகுறிகள் தோன்றுகின்றன. போர் அமெரிக்காவிலிருந்தோ, ரஷ்யாவிலிருந்தோ தோன்றினாலும் அந்த யுத்த மேகம் உலகத்தையே சூழ்ந்து கொள்ளும் எனத் தெரிகிறது.

விஞ்ஞான வளர்ச்சி மிகுந்துள்ள இக்காலத்தில் மற்றொரு உலகப்போர் நடக்குமானால் இரண்டாவது உலகப் போரை கர்நாடகப்போர் என்றே நினைக்கும்படி அவ்வளவு விரைவாக மக்களை அழிக்கும் ஒரு பெரும் போராகக் காணப்படும். போர் நடைபெற்றால் இந்தியா அதில் பங்குபெறுமா? நடுநிலைமை வகிக்குமா? என்பது இப்போது தெரியவில்லை.

நேச தேசங்களுக்கு உதவி செய்வது என்ற முறையில் இந்தியாவை இப்போரில் பங்கு பெறும்படி வடநாட்டுத் தலைவர்கள் செய்தால் அதுதவறு என்று கூறும் உரிமையோ, அதைத்தடுத்து நிறுத்தும் ஆற்றலோ தமிழ் நாட்டுக்கோ தமிழ் மக்களுக்கோ இருக்கப் போவதில்லை என்பதை மட்டும் வருத்தத்தோடு கூறுகிறோம்.

### வருந்துகிறோம்

கும்பகோணம் பேட்டைத் தெரு பிரபல மிராசுதாரும், தர்ம சிந்தையாளரும், ஏழை பங்காளருமான உயர்திரு R.C. குருநாத பிள்ளை அவர்கள் கடந்த சில நாட்களாக உடல் நலமில்லாதிருந்து 1-6-50 வியாழன் அன்று இவ்வுலக வாழ்வை நீத்த செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம். அவரது ஆன்மா அமைதியடைய வேண்டுவதோடு, அவர்களின் குடும்பத்தார் அனைவர்க்கும் குறிப்பாக அவர்கள் புதல்வர்கள் திருவாளர்கள் G. K. சுந்தரம் பிள்ளை, G. சிவசுப்பிரமணிய பிள்ளை, R. C. G. நடராஜ பிள்ளை ஆகியவர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# பெருமை இழக்காதே!

சீ. சவுந்திரபாண்டியன், தூத்துக்குடி

வளர் பிறைபோல் வளர்ந்து வந்த தமிழ் நாடு! வான்புகழ் கொண்ட தமிழ் நாடு! வாரி வாரி முத்துகளை வந்தவர்க்கெல்லாம் அள்ளிக் கொடுக்கும் அருந்தமிழ் நாடு! சந்தனம், தேன், தந்தம், மயில்த்தோகை இன்னும் எண்ணிறந்த மணங்கமழும் வாசனைத் திரவியங்களை உதிர்த்துத் தரும் தருக்கள் நிறைந்த முல்லைக் காடு மணக்கும் நாடு! எத்திசையும் முத்தமிழ் முழக்கஞ் செய்த நாடு!

வேழம் உடைத்து மலைநாடு மேதக்க
சோழவளநாடு சோறுடைத்து;
பூமியர்கோன்
தென்னாடு முத்துடைத்து;
தெண்ணீர் வயல்தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து

என்று ஔவையாரால் புகழ்ந்து போற்றப்பட்ட பொற்றமிழ் நாடு! இப்பெரும் வளநாட்டை ஆண்டு வந்தனர் அறிவழக மன்னர்கள். தமிழ் நாட்டை முப்பிரிவுகளாக மூவேந்தராண்டு வந்தனர்!

"ஏரினும் ஏற்றத்தினாலும்
பிறர்நாட்டு
வாரி சுரக்கும் வளனெல்லாம்—
தேரின்
அரிகாலின் கீழ்கூடம் அந்நெல்லே
கரிகாலன் காவிரிசூழ் நாடு" [சாலும்

எனும் புகழுரையைப் பெற்ற சோழ நாட்டை காவிரிப்பூம்பட்டினம் (உறையூர் மற்றோர் தலைநகர்) தலை நகராகக்கொண்டு அறநீதியோடு சோழ அரசர்கள் ஆண்டு வந்தனர். "வேளம் உடைத்து மலைநாடு" என்று போற்றப்பட்ட சேரநாட்டை வஞ்சிமாநகரைத் தலை நகராகக் கொண்டு தமிழ்ப் பண்போடு ஆண்டு வந்தனர் சேரமன்னர்கள் "பூமியர் கோன் தென்னாடு முத்துடைத்து" என்று பொன்னுரை கூறப்பட்ட பாண்டிய நாட்டை மதுரையைத் தலை நகராகக்கொண்டு மதிமுகத்தால் அரசோச்சினார் பாண்டிய மன்னர்கள்! தமிழர்கள் இன்பமாக வாழ்ந்தனர்!

தமிழர் சமுதாயத்தை யாழும், குழலும், ஆடலும், பாடலும் கலையும் கவிதையும், அழகும், அணியும், அறமும் அன்பும் இன்பமுறச் செய்தன! கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலே! (சிலப்பதிகாரக் காலத்தில்) மூவேந்தர் தம் தோள் வலிமையால் வடவாரியர் பலரை வென்று தம் இலச்சினையை இமயத்தின் எல்லையில் மட்டும் பொறிக்கவில்லை! எங்கெங்கெல்லாம் தமிழ் முழக்கமோ அங்கெங்கெல்லாம் தமிழ்க் கொடிகளைப் பறக்க விட்டனர்!

ஆனால்...! தமிழர் உள்ளத்தில் மட்டும்...! உள்ளத்தில் மட்டுமல்ல, துள்ளி ஓடும் ஒவ்வொரு ஜீவ அணுக்களிலும்கூட தமிழ் மணம் பூத்து பூரித்து மலர்ந்து காணப்பட்டது! இந்தக்காலத்திலே தான் சங்கத்

தமிழ்ப் புலவர் தம் பெருமை உயர்ந்தது! இளங்கோ, நக்கீரர், சாத்தனார், கபிலர், பாணர்போன்றோர், ஔவையார், ஆதிமந்தியார், வெள்ளி வீதியார், காக்கைப் பாடினியார் போன்ற பெண்பாற் புலவர்களும், பெருந்தமிழ் இலக்கியத்திற்குத் தொண்டு செய்தனர். தமிழர் தம், வீர, பண்பை விளக்கி கவிகள் உருவாக்கினர். வளர்ந்தது தமிழ், புகழ்ந்தனர் புவியோரெல்லாம்! தமிழகத்தின் தனிச் செல்வம் பெருமையை எடுத்துக்காட்ட, பாரி, சேரி, மலையன், ஆய், நள்ளி, எழினி, பேகன் போன்ற வள்ளல்களிருந்தனர்!

தமிழகம், இயற்கை வளத்திற்கேற்ப குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நாற்கூறினியுடைத்தாய் விளங்கியது (குறிஞ்சி - மலையும் மலையைச் சார்ந்த இடமும், முல்லை - காடும், காட்டைச் சார்ந்த இடமும், மருதம் - நாடும், நாட்டைச் சார்ந்த இடமும், நெய்தல் - கடலும், கடலைச் சார்ந்த இடமும்) இத்தகைய இயற்கை வளனுக்கேற்ப எழிலுடைய தமிழ் நாட்டில், அசோகர், அகுந்தன், வீஸர், நெப்போலியன் போன்று பெருமை பெற்றவராகிய, சேரன், செங்குட்டுவன், திருமாவளவன், நெடுஞ்செழியன் ஆகிய முத்தமிழ் வேந்தர் முடிசூட்டி வாழ்ந்தனர்;

சிலப்பதிகாரத் தமிழகம் சீரும், சிறப்புமுற்றிருந்த தமிழகம் செந்தமிழர் வளர்ச்சிக் காலம், செல்வங்கள் புல்லைப்போல் படர்ந்திருந்த நேரம்! தமிழ் மக்கட் பேரின்பம் திக்கெட்டும் ஒலித்தது மன்னர், மதி சிறந்தோர்! மந்திரியர், விவேகியர், மக்கள் ஒழுக்கம் உள்ளவர்! வேங்கை எறிந்த வீரர்கள்!

இச் சிலப்பதிகாரத் தமிழகத்தை சிந்தனையிலேற்றும் தமிழர்கள் இன்று ஏன் அடிமையானோம் என்று கேட்கத் தோன்றலாம்! ஒரு சில நவில்கின்றேன்!

பார்ப்பனர் நம் நாட்டிற்கு வந்தனர் பணியாளர்களாக! பார்த்த மன்னர்கள்! பகைவர் என்று எண்ணவில்லை. பணிந்து நடப்பாரென்றெண்ணி பாராளு மண்டபத்திலே, தொண்டு செய்ய ஓர் இடம்! இடம் மட்டுமல்ல ஏராளமான பொருள்! தஞ்சம் என்று வந்தவற்கு பஞ்சத்தில் துணை செய்வது பைந்தமிழர் வழக்கம். அதன்படியே அடிமையாக வேலை செய்தனர் ஆரியர்! மன்னர் பார்வையில்தான்! சூது மதி நிறைந்த பார்ப்பனர். வறுமைக்குக் கொடுத்த பணத்தை வைத்து உருவாக்கினர் கோவில்களை! பொறித்தனர் சமஸ்கிருதத்தை! பாராளும் மன்றத்திலே பக்தி வலை வீசப்பட்டது! பக்தி வலையிலே சிக்கினார் யுக்தி தெரியாத மன்னர்! மன்னர் மனம் மாறியது. குவித்தார் பணத்தை! பதைத்தனர் மக்கள்! வேதத்தின் பெயரால் வீசிய வலையில் மக்களும் சிக்கினர் பக்தி மூத்திய காரணத்தால்!

ஆரியக் குஞ்சுகள் வேலைகளை கள்ளமாகச் செய்தனர்! துரோகிகள் எண்ணம் பலித்தது! துவண்டனர் மக்கள் அன்னியர் பாதங்களிலே! வந்த மன்னர்களை திருப்பியடித்த அரசர்களை ஆபாச புத்தியால் அடிமையாகக் கொண்டனர் ஆரியர்! ஆம் சிதறியது தமிழகம்! பழமையில் மூழ்கினர் தமிழர்! ஆரியர் நயவஞ்சகத்தால் சூது மதி தெரியாத மன்னர்களால் தொலைந்தது தமிழாட்சி! இன்று சிதைபட்டுத் தெரிகிறது தமிழகம்!

நயவஞ்சகத்தால் நாம் அடிமையானோம் என்பதை உண்மையில்

அறிந்த ஒவ்வொரு தமிழனும் பழமையின், நயவஞ்சகத்தினின்று விடுபட முயற்சிக்க வேண்டும்! இனி யாகிலும் அன்னியர் செயல்களிலே நாம் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டியது அவசியம். ஆகவே தமிழர்களே! தற்போது சில அற்பர்கள் (அறிஞர்களாக இருந்தும் அறியாமையால் கூறுகிற காரணத்தால்) இந்தியால் தமிழ் கெடாது. ஆகவே இந்தி படித்தால்தான் அரசாங்க அலுவலகத்தில் இடம்பெற முடியும் என்றும், இல்லாவிட்டால் பின்னர் வருந்த நேரிடும் என்றும் உங்களிடம் எவ்வளவுக் கெவ்வளவு சொன்னால் நீங்கள் இந்தி படிக்க முயல்வீர்களோ அவ்வளவு தூரத்திற்கு வெகு அருமையாக உங்கள் காதிற்கினிமையாக, தமிழ் வளர்ச்சியின் பேரால் கூறிக் கொண்டு வருகிறார்கள். ஆகவே,

வெல்லத் தமிழ் மொழியை;
வீரமிக்க உன்னினத்தை;
கொல்லச் சதிசெய்வோர்,
கொள்கையை மெல்லப்
புகுத்திடுவார் ஏமாந்து
போகாதே தோழா!
பகுத்தறிவால் ஆராய்ந்து பார்.

என்று தமிழாசிரியர் கூறியபடி தமிழர்களே! நீங்கள் அவர்கள் (இந்திப் பிரச்சாரர்கள்) பேச்சைக் கேட்டு தமிழர் கலையிழந்து ஏமாந்து போகாதீர்கள். உங்கள் சிந்தனையை இழந்து விடாதீர்கள். பழந் தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டு செய்ய வாருங்கள்! வாருங்கள்!! இருகை கூப்பி அழைக்கிறேன். வளர்க தமிழ்!

மலர்க தமிழர் நாடு !!



# வள்ளுவர் கண்ட நாடு!

கி. ஆ. பெ. விசுவநாதம்



நாம் எத்தனையோ நாடுகளைப் பற்றிக் கேட்டும், படித்தும், பார்த்தும் அறிந்திருக்கிறோம். ஆனால், திருவள்ளுவர் கண்டு, திருக்குறளிற் கூறியிருப்பது போன்ற ஒரு நாட்டைப் பார்த்ததுமில்லை, கேட்டதுமில்லை. திருக்குறளிற் கூறியிருக்கும் நாடும் நமக்கு எளிதில் தோன்றுவதாயில்லை. படித்து ஆராய்ந்த பிறகே அந்நாடு அறிவுக் கண்களுக்குத் தோன்றுகிறது. அப்படிப்பட்ட நாடு எது? என அறிய ஆசைப்படுகிறீர்களா? அப்படியானால் நீங்களும் ஆராயப் புறப்படுங்கள்.........

திருவள்ளுவர் ஒரு நல்ல நாட்டைக் காணப் புறப்பட்டார். அவருள்ளத்தே ஒரு நாடு உருப்பெற்றிருந்தது. எது நாடு? ஒரு நாட்டிற்குரிய இலக்கணம் என்ன? எப்படியிருந்தால் ஒரு நாட்டை 'நாடு' என அறிஞர்கள் ஏற்பார்கள்? என்றெல்லாம் எண்ணிப்பார்த்து அவர் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார். ஆகவே அப்படிப்பட்ட ஒரு நாட்டை வெளியிலும் காண ஆசைப்பட்டே அவர் தேடிப் புறப்பட்டார். காண முடியவில்லை

தானாக ஒரு ஊரில் தங்கிக் கொண்டு அவ்வூரை ஆளும் அரசன் மூலம் அயல் நாட்டார் அனைவரையும் அழைத்துவரச் செய்து அவரவர்களின் நாடுகளைப் பற்றி வினவினார்.

"செல்வத்தால் சிறந்தது எங்கள் நாடு" என்றார் ஒருவர். "எங்கள் நாடு விளை பொருள்களால் நிறைந்திருக்கிறது" என்றார் வேறொருவர். "எங்கள் நாட்டில் கற்றறிந்த பெரியோர்கள் பலர் உண்டு" என்று கூறினார் இன்னொருவர். "உழைப்பாளிகளை அதிகமாகப் பெற்றது எங்கள் நாடுதான்" என்றார் மற்றொருவர். "எழுத்தாளிகள் நிறைந்தது எங்கள் நாடுதான்" என்றார் இன்னும் ஒருவர். "பேச்சாளிகள் நிறைந்தது எங்கள் நாடுதான்" என்றார் பின்னுமொருவர். "ஆகாயக் கப்பல்களால் நிறையப் போவது எங்கள் நாடுதான்" என்றார் மற்றுமொருவர். "அணு குண்டுகளால் நிறையப்போவது எங்கள் நாடுதான்" என்றார் அடுத்துமொருவர்.

முற்றத்திலிருந்த நால்வரில் முதலாவதாள் எழுந்து வந்து, 'இப்பொழுது தங்களிடம் சொல்லப் பெற்றிருக்கிற எல்லாச் சிறப்புகளையும் ஒருங்கே கொண்டிருப்பது எங்கள் நாடுதான்' என்று கூறிமகிழ்ந்தார். வள்ளுவர் உள்ளம் ஒன்றையும் ஒப்பவில்லை என்பதை அவருடைய முகத்தால் அறிந்தார்கள். அவரும் மெதுவாக வாய் திறந்து "இவையல்ல 'நாடு' என்பது" என வருந்திக் கூறினார். மீதமிருந்த மூவரும் எழுந்து நின்று 'பின் எதுதான் நாடு என்பது?' எனத் துணிந்து கேட்டார்கள். வள்ளுவர் உடனே,

"உறு பசியும், ஓவாப் பிணியும்,
செறுபகையும் சேராதியல்வது நாடு"

எனக் கூறினர். இதைக் கேட்டதும் அந்த மூன்று நாட்டார்களும் மகிழ்ச்சிப் பெருக்கடைந்தனர். அவர்கள் மூவரும் இத்தகைய ஒரு நாட்டைத் தவிர வேறு எதுதான் நாடாக இருக்க முடியும்? என்பதைத் தாங்கள் எண்ணிப் பார்த்ததாகவும், "தங்கள் மூவருடைய நாடுகளும் அப்படிப்பட்டவையே" என்றும், திருவள்ளுவர் வந்து, பார்வையிட்டு, மகிழ்ந்து தங்களையும், தங்கள் நாட்டையும் வாழ்த்த வேண்டும் என்றும் கூறி வருந்தி அழைத்தார்கள். ஒப்பினர்.

முதல் நாட்டினர் தங்கள் நாட்டிலுள்ள நகரங்கள் அனைத்தையும் காட்டி, வீதிகள்தோறும் அமைந்துள்ள அறச்சாலைகளையும் காண்பித்து வரையாது சோறு வழங்கும் வள்ளல்களையும் அறிமுகப்படுத்தி எங்கள் நாட்டில் எவரும் பசித்திருப்பதில்லை எனக் கூறி மகிழ்ந்தார்கள்.

இரண்டாவது நாட்டினர் தங்கள் நாட்டிலுள்ள நகரங்கள் பலவும் காட்டி, வீதிகள் தோறும் நிறுவப் பெற்றுள்ள மருத்துவசாலைகள் யாவையும் காண்பித்து, மருந்து வழங்கப் பொருள் வழங்கும் செல்வர்களையும் அறிமுகப்படுத்தி தங்கள் நாட்டிற் பிணி இல்லை எனக் கூறி பெரிதும் மகிழ்ந்தார்கள்.

மூன்றுவது நாட்டினர் தங்கள் நாட்டின் கோட்டைகளையும் படைகளையும், வில் வேல், வாள் முதலிய போர்க் கருவிகளையும் காட்டி, திறமையான போர் வீரர்களையும் அறிமுகப்படுத்தி வைத்து, தங்கள் நாட்டிற்குப் பகை என்பதே இல்லை எனக்கூறி மகிழ்ந்தார்கள்.

வள்ளுவர் கண்கள் கலங்கின. அவர் உள்ளம் வருந்துவதறிந்து வருந்தினர் நாட்டினர். "புலவரே! எங்கள் நாடு தாங்கள் கூறியது போன்று இல்லையா? என ஏங்கிக்கேட்டனர்.

உங்கள் நாடு எந்தப் பெரியார்க்குப் பிழைசெய்து இந்த நிலைக்கு வந்தது? நாட்டைக் காணச் சென்ற என்னை கேட்டைக் காண இங்கேன் அழைத்து வந்தீர்கள்? இதைவிட பாழாய்ப்போன நாடுகளும் உங்கள் நாட்டினை அடுத்து இருக்கின்றனவோ? என வள்ளுவர் வணங்கி வினவினர். விளக்கம் வேண்டினர் நாட்டினர். விளக்குகின்றார் புலவர்.

"முதல் நாட்டில் உள்ள அதிகமான சோற்றுச்சாலைகள், அங்கு பிழைக்க, உழைக்க வழியில்லாமல் பிச்சை எடுத்து உண்டு, இழிவாக உயிர் வாழும் மக்கள் கூட்டங் கூட்டமாக இருக்கின்றனர் என்பதையே காட்டிற்று, மனம் உடைந்தேன். இரண்டாவது நாட்டிலுள்ள மருத்துவ நிலையப் பெருக்கானது அந்நாட்டிலுள்ள பிணியாளர்களின் பெருக்கையே நன்கு விளக்கிக் காட்டியது-வருந்தினேன். மூன்றுவது நாட்டினரின் படைப் பெருக்கையும், பாதுகாப்பையும் பார்த்த பொழுதே அந்நாட்டிற்குப் பகைவர்கள் அதிகம் என்பது நன்கு விளங்கியது கண் கலங்கினேன்" எனக் கூறினார்கள். "அவ்விதமானல் தாங்கள் கூறிய குறளின் கருத்தென்ன?" என்றார்கள் கூறுகின்றார்:

"இரந்து உயிர் வாழ வேண்டி, இழிதொழிலைக் கைக்கொண்டு பசிபோக்க, வாடி, வதங்கி, அழுகின்ற மக்களும், அவர்களுக்கு சோறு வழங்கி மகிழ்கின்ற செல்வர்களும் கலந்து வாழ்

கின்ற நாடும் ஒரு நாடு ஆகுமா? பிணியாளர்கள் நிறைந்த நாடு அந் நாட்டில் மருத்துவசாலைகள் அமைந்திருப்பதனால் பிணியற்ற நாடு ஆகிவிடுமா? படை எடுக்கக் காலமும் நேரமும் பார்த்து காத்துக் கொண்டிருக்கும் பகை அரசர்களைக் கொண்ட நாடு இப்போது போர் நடக்கவில்லை என்பதற்காக அது பகை இல்லாத நாடு ஆகி விடுமா? ஒருக்காலும் ஆகாது"

"தன்னைப் போன்றுள்ள மற்றொரு மனிதனுடைய உழைப்பின் பலனை இரந்துண்டு வாழ அஞ்சி, உழைக்க வழி இருந்து, உழைக்க இடம் இருந்து, தானே உழைத்து உண்டு பசி அறியாமல் வாழும் மக்களைக் கொண்டது நாடு! மிகக் குளிர், சுடும் வெயில், கடும் பனி, தீக்காற்று முதலியவைகளில்லாத நந்நிலம், நந்நீர், நல்லுணவு, நல்லெண்ணம், நல்லொழுக்கம் ஆகியவைகளால் பிணியின்றி வாழும் மக்களைக் கொண்டது நாடு! கொடையும், படையும் குணமும், வீரமும் அரசுக்குத் தேவை என்றாலும், படையும் வீரமும் பகைக்கு அரணாகும். கொடையும் குணமும் நட்புக்கு வாயிலாகும். படையாலும், வீரத்தாலும் பகை வென்ற நாடு பகை ஒழிந்த நாடாகா. ஆகவே கொடையாலும் குணத்தாலும் பகையை ஒழித்த நாடுதான் நாடு!" எனக் கூறி முடித்தார். இதைக்கேட்ட அந்நாட்டினர் தங்கள், தங்கள் நாடுகளை அவ்வாறு உண்டாக்க எண்ணிப் புறப்பட்டு விட்டனர். நாம் எங்கு புறப்பட்டுப் போவது? திருக்குறளை விட்டு விட்டு!

பசியை வெறும் பசி என்று கூறாமல் 'உறு பசி' எனக் கூறினார் ஆசிரியர். மிக்க பசி என்பது இதன் பொருள். இது உழைத்துண்பவர்களின் பசியையே குறிக்கிறது. என்றும் பசித்திருப்பவர் அல்லது எப்போதும் பசிக்கிறது என்று கூறிக் கொண்டிருப்பவர் இரந்துண்பவரே ஆதலின் அவர் அவ்வாறு கூறியுள்ளார் போலும்!

பிணியைப் பிணி எனக் கூறாது 'ஓவாப் பிணி' எனக் கூறியது நீங்காத பிணியைக் குறித்தாகும். இது சிறு பிணிகளைக் குறிக்காமல் இயற்கை மாறுதலாலும், தீயொழுக்கத்தாலும் ஏற்படுகின்ற தீராப் பிணிகளையே குறித்துக் காட்டுவதாகும்.

பகையையும் பகை எனக் கூறி விடாமல் 'செறு பகை' எனக் கூறியது போர்க்குணம் படைத்த பகையையாம் போர்க்குணம், போர்க்குணத்தை வெற்றி கொள்ளலாமே ஒழிய போர்க்குணத்தை ஒழித்துவிடாது; நற்குணம் ஒன்றே போர்க்குணத்தை ஒழிக்கும் ஆற்றல் படைத்தது. ஆதலின் அவ்வாறு கூறியுள்ளார் எனக் கொள்ளலாம்.

'சேராது' எனக் கூறியது பசி, பிணி, பகை ஆகிய இம்மூன்றும் மக்களையும், நாட்டையும், அரசையும் துன்புறுத்தும் இயல்புடையது ஆதலின் ஒரு நாட்டில் இவை சேராதிருக்க வேண்டும் என்ற பொருள்பற்றியாம்.

'சேராதியல்வது' எனக் கூறியிருப்பதிலிருந்து ஒரு நல்ல நாட்டிற்கு இவை சேராமை மட்டும் சிறப்பல்ல; வேறு பல சிறப்புகளும் வேண்டும் அச்சிறப்புகளால் நாடு இயங்க வேண்டும் எனக் கூறியிருப்பதாகவும் புலப்படுகிறது.

'சேராதியல்வது நாடு' எனக் கூறியிருப்பதிலிருந்து ஒரு நாடு எத்தனைச் சிறப்புகளைப் பெற்று இயங்கினாலும் அத்துடன் பசி, பிணி, பகை ஆகியவைகளால் எதுவும் சேர்ந்து இயங்குமாயின் அது

நாடாகாதென்பது பெறப்படு கிறது.

ஆம்; அது எப்படி நாடாகும்? கையில் நிறையப் பொருளை வைத்துக் கொண்டு இந்த பங்கீடுக் காலத்தில் வாழ்கின்ற மக்களைப் பார்த்தால், 'சேர்ந்து இயங்கும்' நாட்டை நாம் பார்க்க வேண்டியதில்லை. ஆயுளையும் பெற்று, பிணியையும் பெற்று வாழும் மக்களைப் பார்த்து விட்டால் அவர்களின் வாழ்க்கை 'சேர்ந்து இயங்கும்' நாட்டைப்போலவே காட்சியளிக்கிறது. அரச போகத்தையும் பெற்று, பகைக் கவலையையும் பெற்ற மன்னர்களைப் பார்க்கும் பொழுது அவர்கள் 'சேர்ந்து இயங்கும் நாடு' போலவே தோன்றுகிறார்கள். இதனாலேயே ஆசிரியர் திருவள்ளுவர் சேராதியல்வது நாடு எனக் கூறினார் போலும்! ஆகவே வள்ளுவர் கண்ட நாடு "உறு பசியும் ஓவாப் பிணியும் செறு பகையும் சேராதியல்வது நாடு" என்பதாகும். இந்த இருபதாம் நூற்றாண்டில் வாழ்கின்ற அரசியல் அறிஞர்கள் பலரும் ஒரு நாடு எப்படி இருந்தால் நல்லது என்பதை ஒப்புக்கொள்ளும்படி 1980 ஆண்டுகளுக்கு முன்னே கூறியிருப்பவன் ஒரு தமிழறிஞன் என்று எண்ணும்போது தமிழ்நாட்டிற் பிறந்த, தமிழ் மொழிக்குரிய, தமிழ்ப்பெரு மக்கள் அனைவரும் உலக மக்கள் முன்பு பெருமையடைய உரிமையுள்ளவர்கள் என்றே கூறலாம்.

தமிழ் பிறந்த நாட்டிற் பிறந்த நாம், வள்ளுவர் தோன்றிய நாட்டிற் தோன்றிய நாம், குறள் வாழும் நாட்டில் வாழ்கின்ற நாம் வள்ளுவர் கண்ட நாட்டை நாமும் காண வேண்டாமா? என்று எண்ணுங்கள். பிறகு துணியுங்கள். அடுத்துச் செயலாற்றுங்கள். பசி தோன்றாத, பிணி தோன்றாத, பகை தோன்றாத நாட்டைக்கண்டு அதில் வாழுங்கள். உங்கள் வாழ்வு சிறப்படையட்டும்!



## மூன்றாம் ஆண்டு அறிவிப்பு

அடுத்த ஆடித் திங்களோடு "தமிழர் நாடு" 12-வது இதழ் முடிவடைகிறது. ஆவணி இதழ், 3-வது ஆண்டின் முதல் இதழ் ஆகும். ஆகவே இரண்டாவது ஆண்டுக்கு சந்தாதாரராகச் சேர்ந்திருந்தவர்கள் மூன்றாவதாண்டுக்குரிய சந்தாத் தொகை ரூ. 3-யும் முன்கூட்டியே அனுப்பிப் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம். வேண்டாதவர்கள் தயவு செய்து அறிவித்துவிட வேண்டுகிறோம்.

செயலாளர்,
"தமிழர் நாடு"
திருச்சி.

# தமிழன் பெருமை!

மரியானந்தம்

தமிழரின் தன்மானமற்ற தன்மைக்கோர் எடுத்துக் காட்டாக விளங்கும் தற்காலத் தமிழர்களே! கவனியுங்கள். அண்டிப் பிழைக்க வந்த அயல்மொழி, நம்மொழியை ஆட்சி செய்கின்றதே! மனைக்குரியவள் வெளியே தள்ளப்பட்டு வந்தவள் மாவிருந்துண்கிறாளே! உலக வழக்கற்ற ஆரிய மொழி அரியணையில் அமர்ந்து என்றும் செழித்திருந்த—செழித்திருக்கிற மொழி தள்ளப்பட்டுக்கிடக்கிறதே! இவ்வளவுக்கும் காரணம் என்ன? காரணம் யார்? மொழிப் பற்றற்ற நீங்கள் அல்லவா? இன்றைக்கு ஒரு சேரன் செங்குட்டுவன் இருந்தால், ஒரு அதிவீரராம பாண்டியன் இருந்தால், ஒரு சீத்தலைச் சாத்தனார் வாழ்ந்தால், ஒரு நெடுஞ்செழியன் அரசாண்டால், ஒரு கரிகாலன் உலவினால் இவைகளை பூண்டோடு பூண்டாக அழித்திருப்பார்கள். இதோ கீழே பொதிந்த சில சான்றுகளை நோக்குங்கள்.

1. "என் தாய் மொழியாகிய தமிழை பழித்ததினால் அவர்களை அடக்கி எம்மினத்தவரைப் பாதுகாப்பேன்" என்று சூளுரைத்து, வடவரசர்களான கனகவிசயர்களின் முடித்தலையில் கல்லேற்றி வந்தான் மறத்தமிழன் செங்குட்டுவன்.

2. தமிழ்மொழியை அரைகுறையாகப் பாட அதுபொழுது எழுதுகோலால் தனது தலையில் குத்திக் கொண்டார் செந்தமிழன் சீத்தலை சாத்தனார்.

3. "தமிழில் அறிவில்லாத இவன் தலையைக் கொய்வேன்" என்று அரற்றினான் அறம் வளர்க்கும் அதிவீரராமன்.

4 'என் மகன் மாற்றானுக்கு புறமுதுகைக் காட்டியிருந்தால் பாலூட்டிய மார்பை அறுத்தெறிவேன்' என்று முழக்கினாள் ஒரு தமிழ்த் தாய்.

5. "என் பகைவரைச் சிதறடித்து, அவர் முரசத்தைக் கைப்பற்றாது வருவேனாயின் என் குடிகள் கொடுங்கோல்வேந்தன் என்று கூறட்டும்; புலவர்களால் என் நாடு பாடப்படாமல் ஒழிவதாக; இல்லை என்று இரப்பவருக்கு இல்லை என்று சொல்லும் இழிவு எனக்கு வருதாக" என்றான் தமிழரசன்.

6. வடநாடு சென்று மகதமன்னன் வச்சிரவரசன், அவந்தி வேந்தன் ஆகிய இருவரையும் வென்று அளவற்ற திறைகளுடன் தன்னாடு போந்தான் கரிகாலன்.

7 இமயம் வரை சென்று தன் தோள் வலி அடங்காமல் அப்பால் செல்ல முயன்றபோது, அம்மலை கடத்தற்கரியதாய் குறுக்கே நின்றமையின் சினங்கொண்டு அதன் மீது புலி பொறித்தான் என்று சிலப்பதிகாரம் சான்று காட்டுகிறது

•

தமிழ்த் தோழர்களே! தமிழகம் ஆரியத்தின் அரவணைப்பில் இல்லாதிருந்தால் இவ்விழிநிலை எய்யுமா?

பாராண்டவன் பட்டுப்போய் விட்டான்; தன்னறிவு கெட்டான்; கருத்தை இழந்தான்: தத்துப் பிள்ளையாகி விட்டான். இவ்வளவுக்கும் காரணம் யார்? நீங்களல்லவா? ஏனைய நாடுகளுக்கு நாம் தாழ்ந்து விட்டோமே! வெட்கமில்லையா? வேதனைப்படவில்லையா? இன்னுமா பூசல்-பிணக்கு?

தாய் மொழியில் ஆர்வமில்லாமல் பிறமொழியை ஆதரிக்கும் உங்களுடைய கருத்து என்ன? தமிழகத்திலே தன்னுரிமை, தன்னாட்சி, விடுதலை என்ற பேச்சு கிளம்புகிறபொழுது நையாண்டி புரிந்து, வடநாட்டு மொழி மோகத்தில் ஏனோ விழுகிறீர்கள்? தமிழ் நாட்டு அறிஞர்கள், பெரியோர்கள் கூறுவதை ஏனோ பழிக்கிறீர்கள்? நீங்கள் அவர்களைவிடச் சிறந்தவர் என்ற எண்ணமா?

போனது போகட்டும்! வாரீர் நம் வாழ்வின் குறிக்கோளைக் காக்க! மூட்புதரான தமிழகத்தை முல்லைக் காடாக்குவோம்! புற்றுகிய தமிழகத்தை பூங்காவாக்குவோம்! உலக அரங்கிலே தமிழகம் ஓர் குடியாட்சி என்பதைக் காட்டுவோம்! பழமைப் புகழை மீண்டும் நிலைநிறுத்துவோம்! நம் மக்களை மயிலினங்கள் ஆடும் குயிலினங்கள் பாடும் பூஞ்சோலையில் வாழ வகை செய்வோம்! வாரீர்! நம் மானத்தைக்காக்கவாரீர்!! ஆணவ ஆட்சியை அடக்குவோம் என சூளுரைத்து வாரீர்!!!



## அழுவதா! சிரிப்பதா?

"தமிழ் நாட்டுக் குழந்தைகள் தமிழை முதன் மொழியாகக் கற்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை; எந்த மொழியை வேண்டுமென்றாலும் முதன் மொழியாக எடுத்துக்கொள்ளலாம். ஆனால், இந்தியை இரண்டாம் மொழியாகவும், ஆங்கிலத்தை மூன்றாம் மொழியாகவும் பள்ளிப் பிள்ளைகள் கற்றே தீரவேண்டும். தமிழ்ப் பிள்ளைகள் முதன் மொழியாகத் தமிழை எடுத்துக்கொண்டால், தமிழுடன் இந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளையும் கற்றாகவேண்டும். அதற்குப் பதில் இந்தியை முதல் மொழியாக எடுத்துக்கொண்டால், இந்தி, ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளைக் கற்றாலே போதும். ஏனெனில், இந்தியே முதன் மொழியும் இரண்டாம் மொழியுமாகி விடுகிறதல்லவா? இரண்டு மொழிகள் கற்பதா அல்லது மூன்று மொழிகள் கற்பதா என்பதை பிள்ளைகளின் விருப்பத்திற்கு விட்டுவிட்டால், இரண்டு மொழிகள் கற்கத்தான் அவர்கள் பிரியப்படுவார்களேயன்றி, மூன்று மொழி கற்பதற்கு உடன்படார். எனவே புதுக் கல்வித் திட்டம், பள்ளிப் பிள்ளைகள் தாய்மொழியை-தமிழ் மொழியைப் புறக்கணித்து இந்தியைக் கற்கத் தூண்டுகிறது.

வட்டார மொழியையும், தாய் மொழியையும் விட்டுவிட்டு வேற்று மொழியைக் கற்க இடம் தருவது ஏன்? தமிழ் நாட்டில் பிறந்தவர்கள் தமிழைப் புறக்கணிக்க இடம்கொடுத்து அயல் மொழிகளைக் கட்டாயமாகக் கற்கும்படி வகுக்கும் கல்வித் திட்டத்தைப் பார்த்து அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை."

—கோவை திரு. இரத்தினசபாபதி முதலியார்.

# எது அழகு?

டி. ஜே. இன்பராஜ்



தலைப்பைப் பார்த்தவுடன் 'எது அழகாயிருக்கும்?' என்ற எண்ணம் ஒவ்வொருவருக்கும் கண்டிப்பாக எழும். இயற்கை அழகா? உண்மை அழகா? நன்மை அழகா? நட்பு அழகா? கற்பு அழகா? என்ற பல எழுச்சிகள் நம் நினைவில் ஊடாடும். இவையெல்லாம் அழகுதான். இல்லையென்று எவரும் மறுக்கமுடியாது.

“உருவத்தில் அழகிருந்தால் போதாது. செயலாற்றலில் அழகு வேண்டும். அதுதான் உண்மையான அழகு.”

இக்கருத்தை அழகுபட ஒரு புலவர் கூறியிருக்கிறார். அதைப் பார்ப்போம்.

மதுரைக் குமரனார் ஒரு தமிழ்ப் புலவர். அவருடைய முழுப்பெயர், 'கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக் குமரனார்' என்பது. கோனாடு என்பது புதுக்கோட்டையைக் குறிக்கும். எறிச்சலூர் இவரது சொந்தவூராகும். மாடலன் அவருடைய தந்தையார். புலவர் பெருமான் நெடுங்காலம் மதுரையையில் உறைந்ததால் 'மதுரைக் குமரனார்' என்று பெயர் பெற்றார்.

அக்காலத்தில் ஏனாதி திருக்கிள்ளி என்றொரு வீரனிருந்தான். சோழ நாட்டுக் குறுநில மன்னருள் அவனும் ஒருவன். பன்முறை அவன் சோழ வேந்தருக்குப் படைத் துணையாய்ச் சென்று, பல போர்களில் வென்றிருக்கிறான். ஏனாதி என்ற பட்டப்பெயர் அவனுக்கு சோழ மன்னரால் கொடுக்கப்பட்டதே.

வீரத்தில் சிறந்த திருக்கிள்ளி, வள்ளன்மையிலும் சிறந்திருந்தான். தன்னிடம் வரும் புலவர்களுக்கு ஏராளமான பொருட்களை வாரி வழங்கினான். அவனுடைய கொடைக் குணத்தையும் மொழிப்பற்றையும் கேள்வியுற்ற புலவர் பலர் அவனை அணுகி, பாடி, பரிசில் பெற்றுச் சென்றனர். திருக்கிள்ளியின் புகழ் எண் திக்குகளிலும் பரவியது.

மதுரைக் குமரனாரும் அவனுடைய புகழைக் கேள்வியுற்றார். நேரில் சென்று அவனைப் பார்க்க அவாக் கொண்டார். மதுரையிலிருந்து புறப்பட்டு அவனுடைய இருப்பிடத்திற்கு வந்தார்.

புலவர் வந்து பார்ப்பதை, வேண்டாமென்று எந்த தமிழ் மன்னரும் தடுக்கார். திருக்கிள்ளியும் அதற்கு விலக்கல்ல. புலவர் பெருமான் நேராகத் திருக்கிள்ளியிடம் அழைத்துச் செல்லப்பட்டார்.

கற்பனையில் சிறப்புக் கண்டோர் புலவர்களல்லவா? குமரனாருக்கு, திருக்கிள்ளியைப்பற்றிக் கேள்விப்பட்டவுடனேயே அவனுடைய தோற்றம் அவருள்ளத்தில் உருவகமானது. கம்பீரத்தோற்றம், ஒப்பற்ற அழகு

மாசுறு உடம்பு...இவ்வாறு உள்ள ஒரு உருவத்தைத் தானே கற்பனையில் உண்டாக்கிக்கொண்டார். அதைப்போல்தான் திருக்கிள்ளியும் இருக்கக்கூடுமென்று அவர் நினைத்திருந்தார்.

திருக்கிள்ளியைப் பார்த்துத் திடுக்கிட்டார் குமரனார். ஆம்! கற்பனைக்கும் உண்மைக்கும் வெகுதூரமென்பதை அவர் அந்த இடத்தில் கண்டார். திருக்கிள்ளிக்கு கம்பீரத் தோற்றமிருந்தது. ஆனால் அழகில்லை. மாசுறு உடம்புமில்லை. உடம்பெல்லாம் ஒரே வடுக்கள். உடனே புலவர் திருக்கிள்ளியைப் பார்த்து,

“மன்னனே, நீ போர்க்களத்தில் புகுந்து, முன்னின்றுப் போரிட்டு பகைவரின் சேனையை அழித்து, வெற்றி பெறுகிறாய். நீ, வீரத்துடன் முன்னின்று போரிட்டமையால் உன்னுடைய உடலெங்கும் காயங்களின் தழும்புகள் காணப்படுகின்றன. உன்னுடைய வீரச் செயல் கேட்பதற்கு இனிமையாக இருக்கிறது. உன்னுடைய உடலோ பார்ப்பதற்கு அருவெறுப்பாய் இருக்கிறது.

உன்னுடைய பகைவர் போர்க்களத்தில் உன்னை எதிர்த்து நிற்க முடியாமல் புறங்காட்டி ஓடுவதால், உடலில் காயமின்றி பார்ப்பதற்கு அழகாகத் தோன்றுகின்றனர். ஆனால் அவர்களுடைய செயல் கேட்பதற்கு அருவருப்பைக் கொடுக்கிறது.

அதனால் நீ ஒரு விதத்தில் இனிமையுடையவனாக யிருக்கிறாய்; உன் பகைவரும் ஒரு விதத்தில் இனிமையுடையவராக யிருக்கிறார். ஆயினும் உலகத்தினர் உன்னைமட்டும் புகழ்கின்றனரே, அதற்குக் காரணமென்ன? எனக்கு சொல்வாயா?” என்று கேட்கிறார்.

திருக்கிள்ளியின் ஒப்பற்ற வீரத்தையும், அவன் உயிருக்கும் உடலுக்கும் அஞ்சாது போர்க்களத்தில் முன்னிற்றலையும், பகைவர் புறங்காட்டியோடும் பொழுது தன் ஆயுதத்தை அவர்மேல் பிரயோகிக்காத் தன்மையையும் குமரனார் அழகாகக் கூறுவதுடன், தமிழ் மக்கள் ‘ஒருவருடைய உருவத்தைப் பார்த்து அவரை மதிப்பிடாமல், அவருடைய செயலைப் பார்த்தே மதிப்பிடுவர்’ என்ற சீரியக் கருத்தினையும் இப்புறப்பாட்டின் மூலமாகத் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

நீயே, அமர்காணி னமர்கடந்தவர்
படைவிலக்கி யெதிர் நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கை
யொடு
கேள்விக் கினியைக் கட்கின்னாயே
அவரே, நிற்காணிற் புறங்கொடுத்
தலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக் கினியர் செவிக்கின்
னாரே
அதனா, னீயுமொன் றினியை
யவருமொன் றினியர்
ஒவ்வா யாவுள மற்றே வெல்போர்க்
கழல்புனை திருந்தடிக் கடுமான்
கிள்ளி
நின்னை வியக்குமிவ் வுலகமஃது
என்னோ பெரும வுரைத்திசி
னெமக்கே.

[புறநானூறு]





# இலக்கியம்

## நான் அமைச்சரானால்?

(சுப்பு ஆறுமுகம்—சென்னை)



ஏழைவாழ வழியிலாது மாய்கையில்—நாட்டில்
எங்கும்சுற்றி மாலைவாங்கப் பேசிடேன்!

வாழ்பவர்தம் மொழி,எதென்று கேட்கையில்—பிச்சை
வாங்குமொழியைக் கற்கச்சட்டம் செய்திடேன்!

உரிமைவிழைந்து மக்கள்உள்ளம் அலைகையில்—சிறையின்
உள்அவரைத் தள்ளிக்கொன்(று) உவந்திடேன்!

அறிவில்மாந்தர் கல்சுற்றிக்கும் பிடுகையில்—அரசுப்
பொருளைக்கொண்டு சமயம்பரவச் செய்திடேன்!

ஆடைஉணவு வீடில்லாதார் மாள்கையில்—நாட்டின்
அழகிதென்று தலைவர்நினைவு அமைத்திடேன்!

பெண்களுரிமை யிழந்து புழுவாய் மடிகையில்—நீதி
பேசும்கல்வி யளித்திடா திருந்திடேன்!

உணவில்லையென உயிர்ஒன்றிங்கே அலைகையில்—என்
உயிரைவழங்கு முதவிக்கும்பின் வாங்கிடேன்!

ஏழைபணக் காரநாகம் தீண்டுமுன்—உலகை
வாழ்த்திடும்பொது உடமை காணாதிருந்திடேன்!

ஆலைஉழைப் பாளிகூலி குறைகையில்—என்
ஆசைதீர காசுசேர்த்து வைத்திடேன்!

"நீடுவாழ்க" என்றென்னைவாழ்த் திடுகையில்—நெஞ்சம்
நெக்குருகிதன் நிலைபுரியா திருந்திடேன்!

உழுத்தர்கையை உழுத்தர்குலுக்கும் நேரத்தில்—உலகிற்(கு)
உழைக்குமன்பர் கைகளைஎன் கண்வைப்பேன்!

# தமிழ்மொழி வாழ்த்து !

— நல்லை—அ. இளங்கோவன். —

செந்தமிழ் வாழிய! தென்றமிழ் வாழிய!
தீந்தமிழ் வாழியவே!
எந்தமிழ் வாழிய! இயலிசை நாடக
இன்றமிழ் வாழியவே! 1

ஊற்றெனப் பெருகும் ஒண்டமிழ் வாழிய!
உரத்தமிழ் வாழியவே!
வேற்றவர் தாங்களும் விழைதமிழ் வாழிய!
வியன்றமிழ் வாழியவே! 2

பாட்டினிற் சிறந்த பைந்தமிழ் வாழிய!
பசைத்தமிழ் வாழியவே!
ஏட்டினிற் சிறந்த எழிற்றமிழ் வாழிய!
இளந்தமிழ் வாழியவே! 3

கண்டென இனிக்கும் கலைத்தமிழ் வாழிய!
கனித்தமிழ் வாழியவே!
உண்டறி யாச்சுவை யூட்டியு ணர்விக்கும்
உயிர்த்தமிழ் வாழியவே! 4

செப்புதற் கரிய சீர்த்தமிழ் வாழிய!
செழுந்தமிழ் வாழியவே!

இப்புவ னத்தினில் எங்கெங்கும் சென்றுயர்ந்
தென்றென்றும் வாழியவே! 5



# சிந்தனைக்குரியது!

— இரா. இராசமாணிக்கம் —



கோவலன் கற்புக்கரசியான கண்ணகியை மணந்தான். ஆனால், மாதவியுடன் கூடி வாழ்ந்து பின் மனவேற்றுமையால் பிரிந்து, தான் வாழ வேண்டி கண்ணகியுடன் மதுரை சென்றான். வாழச்சென்றவன் வாழ்ந்தானா? இல்லை. ஏன்? பொற்கொல்லன் சொல்லியதை ஆராயாமல் ஏற்றதினால்தானே! ஆராய்ந்திருந்தால் கதையின் போக்கே மாறி யிருந்திருக்கும் அல்லவா?

கோவலன் கொலையுண்டதைக் கேட்ட கண்ணகி ஆராத்துயருடன் கொலைக்களம் சென்றாள். கணவனைக் கண்டாள் இரு கூறாக. தன் கற்பின் வலிமையால் கணவன் ஒரு தரம் பேசக் கேட்டாள். ஆத்திரம் அடங்கா நங்கை அரச அவை சென்றாள் நீதியை நிலைநாட்ட. நீர்வழியும் கண்களைக்கண்ட அவையோர்கள் அவையடக்கம் ஆனார்கள். பாண்டியன் அவளை யார் என்று வினவ, அவள், தான் பசுவின் கன்றை தன் மகன் கொன்ற செய்தி கேட்டு, தாய்பசுவின் துயரம் கண்டு, தன் மகனை தேர்க்கிழிட்டு தானே மகன்மீது தேர் ஓட்டிய மனுநீதிச் சோழன் ஆண்ட சோழவளநாட்டில் உள்ள புகார் நகரம் என்றும், அந்நகரின் பிரபல வணிகரின் மைந்தன் ஊழ்வினையின் வலியால் என் காற்சிலம்பை விற்று வாழவேண்டி வந்து, உன் வலிமையால் கொலைக் களம்பட்ட கோவலன் மனைவி கண்ணகி என்றாள்.

கண்ணகியின் மொழி கேட்ட அரசன் அரசியல் சுற்றத்தோடு ஆராய்ந்தானா? இல்லை. பொற்கொல்லன் பேச்சொன்றையே நம்பினான். அதனால்தான்,

"............ ...பெண்ணணங்கே!
கள்வனைக் கோறல் கடுங்கோலன்று
வெள் வேற் கொற்றம் காண்"

என்று உரைக்கின்றான். பொற்கொல்லன் சொல்லியதைத் தான் ஆராயாவிட்டாலும், கண்ணகி தன் கணவன் ஆங்கு வந்த காரணமும் தெரிவித்து, பெயரையும் சொல்லிய பிறகாயினும், கோவலன் என்று அவனைக் குறிப்பிடாது ஆராய்ந்து முடிவு செய்தவன்போல் 'கள்வன்' என்றே அவனைக் குறிக்கின்றான்.

கண்ணகி சிலம்பையும் அரசியின் சிலம்பையும் உடைத்தவுடன் உண்மையை உணருகிறான் பாண்டியன். அப்பொழுதுதான், தான் ஆராயாமல் செய்த முடிவை உணர்கிறான்.

"பொன் செய் கொல்லன்தன் சொற்கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்?"

என வாய்விட்டு அரற்றுகிறான். தன் குலத்துக்கு தன்னால் உண்டான குற்றம் மனதைப் புண்படுத்துதல் பொறுதவனாகி,

"மன்பதைக் காக்கும் தென்புலம் காவல்,
என் முதற் பிழைத்தது; கெடுக என் ஆயுள்"

என்று சொல்லிக்கொண்டே உயிர் விட்டுவிடுகிறன். இவ்வளவும் எதனுல் ஏற்பட்டது என்பதுதான் நம் சிந்தனைக்குரியது.

பொற்கொல்லன் சொல்லியதை ஆராயாமல் ஏற்றது மன்னன் உயிருடன் நின்றதா? இல்லையே! மதுரையம்பதி தீக்கிரையாவது வரையிலும் போய்விட்டதல்லவா?

இக்கருத்துப் பற்றிதான் நம் ஔவை மூதாட்டியார், "ஏற்ப திகழ்ச்சி" என்று பாடியிருக்க வேண்டுமே யல்லாமல், 'பிச்சை எடுப்பது இகழ்வான செயல்' என்னும் பொருள்பட பாடியிருக்க முடியாது என்று அறுதியிட்டுக் கூறலாம். 'ஏற்பதிகழ்சி' என்று இப்பொருள்பட பாடியிருப்பாளானுல், அடுத்துப்பாடிய "ஐயமிட்டுண்" என்பதன் பொருள் என்ன? முன்னுக்குப் பின் முரணுகப் பாடுகின்றவரா? நம் ஔவை மூதாட்டி. அவள் உண்மைக் கருத்தறியாது, பிச்சை எடுப்பது இகழ்வு என்று சொல்லிவிட்டு, அடுத்தகணமே 'பிச்சையிட்டு சாப்பிடு' என்று முன் பின் யோசியாமல் பொருள் கொள்ளும் நாமாவது ஒருவேளை... இருக்கலாம். பிச்சை ஏற்பவன் இல்லையேல் பிச்சை இடுவது எங்கே? விதண்டாவாதத்திற்குரிய பொருளேயன்றி, விவேகத்திற்குரிய பொருளாக பகுத்தறிவுள்ளோர் ஒருக்காலும் ஒப்புக் கொள்ளார்.

விதண்டாவாதக் காரர்களுக்கு இது ஒரு பொழுதுபோக்காகவே போய்விட்டது. ஔவையார், 'அறஞ்செய விரும்பு' என்று சொல்லி யிருக்கிறர் என்பான் ஒருவன். மற்றவன் 'ஏற்பது இகழ்ச்சி' என்பான். முன்னவன் 'ஐயமிட்டுண்' என்பான். கடந்த தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று வானெலி நிலையத்தில் நடந்த கதையொன்றில் கூட இப் பாட்டுக்கள் அடிபட்டன அல்லவா?

ஆதலால், 'ஏற்பது இகழ்ச்சி' என்பதற்கு, ஏற்பது — (ஒருவர் சொல்லும் சொல்லை ஆராயாமல்) ஏற்பது, இகழ்ச்சி — இகழ்வான செயலாகும். இப்பொருள் கொண்டால் வீண்வாதங்களுக்கும் இடந்தராதல்லவா? ஆசிரியரையும் முட்டாளாக்க வேண்டியதில்லை, நாமும் முட்டாளாக வேண்டியதில்லை.

இக்கருத்துபற்றி தானே பொதுக் கொள்கையுடைய தமிழ் மறை ஆக்கிய வள்ளுவனரும்,

"எப்பொருள் யார்யார்வாய்க்
கேட்பினும் அப்
பொருள் மெய்ப்பொருள்
காண்பதறிவு"

என்று பகருகிறர்.

ஆதலால், 'ஏற்பதிகழ்ச்சி' என்பதற்கு 'ஒருவர் சொல்லும் சொல்லை ஆராயாமல் ஏற்பதுதான் இகழ்ச்சி' என்று பொருள்கொள்வதே சாலச் சிறந்ததாகும்.

இதுவும் பகுத்தறிவாளர்களின் சிந்தனைக்குரியது தானே! வாழ்க ஔவையின் புகழ்!!



---

## எழுத்தாளராக......?

**ஒருவர்:**—(நண்பரிடம்) என்சார்!...நீங்கள் கதை, கட்டுரைகள் எழுதி, எழுத்தாளராகவேண்டும் என்று சொன்னீர்களே! இப்பொழுது என்ன செய்கிறீர்கள்?

**நண்பர்:**—இப்பொழுது நான்! (எழுத்தாளராகும் விதி "எழுதுவது எப்படி?" என்கிற கட்டுரையை எழுதிக்கொண்டிருக்கிறேன்!

**ஒருவர்:**—.........? ? ?

இ. சா. வாசுதேவன், திருச்சி.

---

# சூழ்நிலையும், சுற்றமும்!

அ. பழனியப்பன், சென்னை.



ஒருவனைச் சூழ்ந்து அமையும் நிலையைச் சூழ்நிலை என்றும், ஒருவனுக்கு இயல்பாக அமையும் துணையை சுற்றம்என்றும் கொள்ளலாம்.

சூழ்நிலை, அமைந்தாங் கொழுகும் தன்மைக்கேற்ப, நன்மை தீமை இரண்டினையும் விளைவிக்கும் ஆற்றல் வாய்ந்தது. நல்ல சூழ்நிலை வாய்க்கப் பெற்றோர், தம் முயற்சி திருவினை பயக்கத்தக்க உதவி பெற்று சிறந்து விளங்குவர். நல்லதல்லாத சூழ்நிலையிலுள்ளார் எத்துணைத் திறமை மிக்காராயினும், செயலாற்றிச் சிறக்க வியலாது. குடத்துள் விளக்கென, பாரறியாது பதுங்கிக் கிடப்பர். சூழ்நிலை இயற்கையிலேயே நன்கமையப் பெற்றோரெவரும் அதனுதவியால் செயற்கரும் செயல் புரிவார். அஃதின்றி இயல்பாகவே தீமை பயக்கும் சூழ்நிலையில் இருத்தப்பெற்றோர், அந்நிலையை மாற்றி நன்மை தரத்தக்கதாக்கிக் கொள்ள வேண்டும் வகையெலாம் முயலவேண்டும். ஓயாது உழைத்தபின்னர் அந்நிலை ஊதியம் தரும் நன்னிலையாகவும் மாறியமைதல் கூடும். ஒரேவழி முயன்றும் பயன்தராது பெரும் துயர் தந்தால், அச்சூழ்நிலைக்கு அடிமைப் பட்டு இடற்படாமல், அக்கணமே மற்றொரு நல்ல சூழ்நிலையை நாடல் வேண்டும். இஃது இன்றியமையாது வேண்டப்படுவது. ஏனெனில் ஒருவன் வாழ்வில் பங்குகொள்ளும் இன்ப துன்பங்கட்கு உறுதுணையாய் நின்று இயக்குவது சூழ்நிலையும் சுற்றமுமாகும்.

துணை செய்யாத சூழ்நிலையில் நிலைத்து நின்று துன்புறுமொருவன் தான் நினைத்தபடி நற்செயலாற்ற முடியாது. ஊக்கமும், உள்வலியும் இழப்பதுடன், தான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறத்தொண்டாற்றி மகிழும் பெரும் பேற்றையும் பெறுதொழிவன். நல்வினை முடித்தவன் பெறும் பெருமையினின்றும், அதனால் மக்கள் அடையும் பயனே பெருமித மளிக்குமாகையால், தன் செயலுக் குதவி நிற்காத சூழ்நிலையினின்றும் வேறுபட்டு வாழவேண்டுவது அவசியமாகும்.

நல்லதினின்றும் அல்லதே மக்களை நொடிப்பொழுதில் கவர்ந்துவிடும் தன்மை பெற்றது என்பது வெள்ளிடை மலை. தவறு விளையச் சூழும் நிலையினின்று தவறிழைக்காது தப்புவது தன் உள்வலி மிக்காருக்கன்றி வேறொருவர்க்கு இயலாது. ஏனெனில், சிந்தனை வழிச் செல்லவிடாது மனத்தைத் தன்பால் ஈர்த்துத் தன்மயமாக்கும் சக்தி வாய்ந்தது சூழ்நிலை. அந்நிலையுட் சிக்கி, போரிட்டு வெற்றி காண முனைவதினின்றும் அந்நிலை யணுகாது ஒதுங்கி வாழ்வதே நன்று. நெஞ்சிலுரமற்ற சிலர் அந்நிலையை மாற்றப் புகுந்து அதனின்று மீளவழி இன்றி அதற்கிரையாக்கப் பட்டதுமுண்டு. ஆகையால் வினையாற்ற முனையுமுன், தன்னைச் சூழ்ந்து நிற்கும் நிலை தன் வினைக்கு உதவி நிற்குமாவென உன்னிப் பார்த்து அதன் பின்னரே செய

லாற்ற வேண்டும். அவ்வாறு தொடங்கும் செயல் எவ்வித இடையூறுமின்றி இனிது நிறைவெய்தும் என்பது திண்ணம்.

வாழ்க்கைக்கு இன்றியமையாது வேண்டப்படுவது துணை நலம். தன்னைச் சூழ்ந்து துணைபுரிவாரெவரும் சுற்றத்துள் வைக்கப்படுவர். பெற்றோர், மனைவி, மக்கள், உற்றார், உறமுறையோர் யாவரும் சுற்றமே. ஒருவன் தன் மனத்துள் உருவாய எல்லா வினைகளையும் உடனடியாக முடித்து அதன் பலனைக்கண்டு மகிழ அவனொருவனால் மட்டும் முடிவதில்லை. பிறர் உதவி நாடித் துணை கூட்டவேண்டுவது இன்றியமையாததாகிறது. அதுபோழ்து தன் குறிக்கோள் நிறைவெய்த, உள்ளன்புடன் உதவி உற்ற துணையாக அமைவது சுற்றம்.

தன் சுற்றம், தன்னைச் சூழ்ந்து நிற்காது தனித்தியங்கி வேறுபடின், தன் மனவெழுச்சியை உருவாக்க நீண்டகாலமாகும். விடாமுயற்சியுடன் வினையைத் தொடர்ந்து இறுதியில் வெற்றி காண வேண்டும். தன் சுற்றம் தன்னைச் சூழாது மாறுபட்டால் அதைத் துச்சமென மதித்துவிடல் துன்பந்தரும். வினைத் துவக்கத்திலிருந்தே அல்லலும் துவங்குமாகையால் தன் குறிக்கோளை எண்ணி நடப்பதினின்றும் அல்லலறுக்க ஆவன செய்வதிலேயே தன் முழு நேரத்தையும் செலவிடவேண்டிய நிர்ப்பந்த நிலை வரும். வினையாற்ற முனைந்தவன் வினை பகை தேடிபடைந்ததாய் முடியும். ஆகையால் தான் ஒரு நல்வினை முடிக்க முயலுமுன் அதற்குச் சாதகமான முறையில் தன் சுற்றமும் சூழ்ந்து நின்று உதவுமாவென ஆய்ந்துணர்வது சாலச் சிறந்தது.

இயற்கையாக அமைந்த சுற்றம் துணை நிற்காவிடின் அதையும் துணையாக்கிக்கொள்ள இயலாவிடினும் துன்பமில்லை. பகையாக்கிக் கொண்டு பல்வேறு இன்னல்கட்குள்ளாகி, வாளாவிருப்பது வருந்தத்தக்கது. துணையற்ற சுற்றம் விடுத்து தோன்றாத் துணையாகத் தோன்றி உதவிபுரியும் மக்களைத் தன் உண்மைச் சுற்றமெனக் கொண்டு சேர்ந்து வாழ்ந்து உலகுய்ய வேண்டுமனைத்தையும் திறம்படச்செய்து சிறக்க வேண்டும்.

ஆன்றோர்கள் அன்பின் வழி நின்று அருணெறிக்கும் நன்னெறிக்கும் எத்துணை உயர்வு தந்து பாராட்டினார்கள் என்பதை நன்கறிந்து அதன்வழி ஒழுகிப்பழகிய மக்களைக் கொண்ட நம் நாட்டின் சூழ்நிலை காந்தி அடிகளாரின் அஹிம்சையையும் சத்தியத்தையும் தலையாகக் கொண்ட கொள்கையை ஆதரித்து அதன்வழி நின்று பெரும் புகழ்பெற பலவகையானும் உதவி நின்றமை தக்கதொரு சான்று. பலாத்காரத்தில் நம்பிக்கை கொண்டு அணுகுண்டுகளைப் பெருக்கி அச்சமூட்டி ஆட்சி செய்யும் மேலை நாட்டின் சூழ்நிலை அடிகளாரின் விழுமிய நோக்கத்திற்கு அணி செய்திருக்குமாவென்று ஓர்ந்து உன்னுவார்க்கு சூழ்நிலை பொருந்தியமையப் பெறவேண்டுவது எத்துணை அருமைப்பாடுடைத்து என்பது தெள்ளிதில் புலனாகும்.

அடிகளாரின் சுற்றமாய் உண்மைத் துணையாய் வாழ்க்கைத் துணைவியாய் அமைந்த கஸ்தூரி அம்மையாரின் பெருந்தொண்டும் பெற்றியுமே அவர்தம் உலகப் புகழுக்கு உறைவிடம். அவ்வம்மையார் அடிகளாரின் குறிக்கோளைத் தன்குறிக்கோளெனக் கொண்டு அவர் தம் மனவெழுச்சிகள் உருவாக உற்ற துணையாக இருந்தார். இன்பம் நுகர இயல்பிருந்தும் அதையொரு

பொருட்டாக எண்ணி மதியாது தம் தலைவரின் விருப்பத்திற்கிணங்கி துன்பத்தை வரவேற்று இன்பமாக்கிக்கொண்டார். சுற்றமாக அமைந்த அடிகளாரின் மனைவியார் பிற பல பெண்களைப் போல தன்னலங்கருதி பெரும்பொருளீட்டத்தூண்டி ஆடிப்பாடி மகிழவேட்கை கொண்டு தம் கணவரின் உயர்ந்த குறிக்கோளை அறிந்தும் பொருட்படுத்தாது மாறுகொண்டு அவர்தம் தந்தைப் பேற்றையும் இடித்துக்காட்டி தினமும் அல்லற் படுத்தியிருந்தால் அடிகளாரின் மேதையை இவ்வுலகறிய வாய்ப்பேற் பட்டிருக்குமோ? இதனை எண்ணிப் பார்த்தால் சுற்றமாக அமையும் துணை நலம் எத்துணை சிறப்பாயது இன்றியமையாது வேண்டப்படுவது என்பது குன்றின்மேல் விளக்கெனக் கூறுது புலனாகும்.

உலகியல் மக்களுள் அறிஞர் பலர் உளர். ஆற்றல் மிக்காரின் தொகைக்கும் குறைவில்லை. எனினும் ஒரு சிலர் மட்டுமே சிறந்து விளங்கக் காண்கிறோம். அதற்குப் பல்வேறு காரணங்கள் உள. அவற்றில் சூழ்நிலையும் சுற்றச்சார்பும் சேர்ந்து உதவாமையும் ஒன்று. ஆகையால் ஒவ்வொருவரும் அவரவர்தம் நிலைக்கேற்ப நல்லதொரு சூழ்நிலையை ஏற்படுத்திக்கொண்டு, சுற்றத்தின் துணை பெற்று தனி சிறக்க நல்வாழ்வு வாழ்வார்களாக!



# இல்வாழ்க்கை!

— மரியானந்தம் —



இல் வாழ்வு என்பது ஆண் பெண் என்ற ஈருடலையும் பிணையும் ஓர் கயிறு. இல் வாழ்வின் கண்ணே நல்லறத்தை இனிதியற்ற இல்லற பாத்திரங்களாகிய இரு பாலார்க்கும் ஒத்த அறிவு, ஒத்த பண்பு, ஒத்த அன்பு முதலியன இன்றியமையாதனவாகும்; இன்றேல் நல்வாழ்வாகாது.

இல்லற வாழ்வு இயற்கையாகும்; இயற்கை தன் பயன் கருதி எவ் வினையும் மாற்றாதது போல, இயற்கை வாழ்வாகிய இல்லற வாழ்வை நடாத்தும் ஒவ்வொருவனும் தன் பயன் கருதி எதையும் புரியாது வாழ்க்கை நடத்துவது இயற்கை வாழ்க்கையாகும்.

இல்லக் கிழத்தி இல்லறத்திலேற்படக்கூடிய இன்னல்களை தன்னாலியன்றவரை அகற்றி, இல்லறம் இன்புற நடாத்துவது கடமையாகும். அஃதில்லையேல், அகமுடையான் முதல் அனைவரும் அல்லும் பகலும் அல்லல் பட்டு கவலைக்காளாவர். குடும்பத்தில் சாதாரணமாக ஏற்படக்கூடிய விகற்ப வேறுபாடுகளுக்கு பெண்களே பெரும்பாலும் மூல காரணமாயிருக்கின்றனர். குடும்பத்தினிடையே ஐக்கிய மேற்படுவதற்கு நற்குணமுடைய நங்கையர் முயற்சித்தல் வேண்டும்.

" மருவிய காதல் மனையாளுந்தானும்
இருவராய்ப் பூண்டீர்ப்பினல்லால்—
ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னுமியல்
புடையவான் சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று "

என அறநெறிச்சாரம் அறுதியிட்டு அறிவிக்கிறது. இல்லறமென்ற வண்டியைக் கணவன் மனைவி என்ற இரு எருதுகள் ஒன்றுபட்டு இழுத்துச் செல்லாமல், ஒன்றுக்கொன்று முரண்பட்டு இழுத்துச் செல்லுமாயின் வண்டியாகிய இல்லறத்திற்கும், எருதுகளாகிய கணவன் மனைவி ஆகிய இருவருக்கும் இணையற்ற இன்னல்கள் ஏற்படும்.

இல்லறத்திலீடுபட்ட இருவரும் காமவேட்கை வழியியங்காது மக்கட் பேறு கருதியும் பிறர் அன்பு தொண்டு கருதியும் இயங்குதல் வேண்டுமென்பதை பண்டைத் தமிழர் 'உயிர்க்கு அறம் வளர்த்தல்' என்று போற்றினார்கள்.

" இளமையிற் கல்வி சிலையிலெழுத்து " என்று நம் முன்னோர் கண்டபடி பெற்றோர் தங்கள் பிள்ளைகளை பள்ளியில் பயில ஆவன செய்யவேண்டும். அவர்கள் வாழ்வின் விளிம்பிலே சான்றோன் என்ற கொடி பறக்கச் செய்யவேண்டும். பிள்ளைகளைச் சீர்திருத்த வேண்டுமென்ற எண்ணத்துடன் தந்தை தண்டிக்கும்போது தாயோ, தாய் தண்டிக்கும்போது தகப்பனோ குறுக்கிடுதல் கூடாது. வாழ்வின் பருவத்திலே தமிழ் மொழிப் பற்று-தமிழ் இனப் பற்று-தமிழ்நாட்டுப் பற்று என்ற அமுதக் கனிகளை ஊட்ட வேண்டும். இஃதில் பெற்றோர் அசட்டையாக இருப்பின், பின்னர் பிள்ளைகள் மாற்றானுக்கு அடிமைப்பட்டு, தாள்பணிந்து, மானங்கெட்டு, சிறுமையில் சீரழிவார்களேயொழிய நல்நிலை அடையார் என்பது நம் தமிழரின் கொள்கை.

இனிமை பொங்குக இல்லறத்தில்! தளிர்க தமிழகம்!



# ஜெயராமன்!

டர்பன் திரு. சங்கர குமாரன்

"உன் பெயரென்ன?" என்றார் வாத்தியார்.

'ஜெயராமன்' என்றான் பையன்.

சிறுவனுடைய முகம் வாடி உடல் மெலிந்து கண்கள் குழி விழுந்து பார்க்கப் பரிதாபகரமாக யிருந்தது. மேலே போட்டிருந்த சட்டை யாரோ பெரிய பையனுடையது. இவனுக்காகத் தைத்ததல்லவென்று பார்க்கையிலேயே தெரிந்தது, கால் சட்டையில் அங்கங்கே பொத்தல்கள். தலைக்குப் போட்டிருந்த தொப்பி பல தினுசு துணிகளால் அங்கங்கே ஒட்டுகள் போடப்பட்டிருந்தது. ஓரமெல்லாம் இற்றுப் போய் நூல் தொங்கிற்று. தலைமயிர் முழுதும் மொட்டை அடித்துப் பல இடங்களில் புண் வந்த சொட்டை தெரிந்தது.

"உன் வயதென்ன, பையா?" என்று கேட்டார் வாத்தியார்.

"ஒன்பது ஐயா" என்றான் சிறுவன்.

எல்லாப் பையன்களும் சிரித்தார்கள். முதல் வகுப்புக்கு ஒன்பது வயதுப் பையன் வந்தானேயென்று அவர்களுக்கு வேடிக்கை. வாத்தியாரும் நகைத்துக்கொண்டே "சத்தம்!" என்று கத்தினார். பையன்கள் வாய்மேல் கைகள் வைத்து மூடிக்கொண்டு ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு சிரித்தார்கள்.

"ஏன் இத்தனை நாள் பள்ளிக்கூடத்தில் சேரவில்லை?" என்றார் வாத்தியார்.

பையன் பதில் சொல்லாமல் தரையைப் பார்த்தான்.

"ஏன்?" என்றார் வாத்தியார் மறுபடியும்.

"அம்மாவுக்கு வீட்டில் துணை யாருமில்லை. குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றான்.

மறுபடியும் வகுப்பிலுள்ள பையன்கள் சிரித்தார்கள்.

"உன் தகப்பனார் பெயரென்ன?" என்றார்.

சிறுவன் பதில் சொல்லுவதற்கு முன் ஒரு பையன் எழுந்து "இவன் சாராய சுப்பன் மகன் ஸார்" என்றான்.

எல்லாரும் "கொல்" என்று சிரித்தார்கள். பையன் தலை குனிந்தான்.

இதற்குள் மத்தியான விடுதி மணியடித்தது. பிள்ளைகளெல்லாம் வெளியே போய் ஓடிக் குதித்து விளையாடினார்கள். ஜெயராமனைச் சுற்றிப் பத்துச் சிறுவர்கள் சூழ்ந்து கொண்டார்கள்.

"உன் தொப்பியைக் கொடு பார்க்கலாம்" என்றான் ஒருவன்.

"அடே அதையேன் தொடுகிறாய்? புண் ஒட்டிக்கொள்ளும்" என்றான் ஒருவன்.

"குப்பையில் கிடந்ததை, பாவம் அவன் அம்மா எடுத்துத் தைத்து சரிப்படுத்திக் கொடுத்திருக்கிருள்" என்ருன் ஒருவன்.

"குழந்தை எடுத்துக்கொள்ள வீட்டுக்குப் போ" என்ருன் மற்ருெருவன்.

"சொக்காய் யாருடையதடா?" என்ருன் இன்னெருவன்.

"உங்கப்பன் நேற்று எவ்வளவு குடித்தான்?" என்ருன் ஒருவன்.

"அடே, இவனண்டை சாராய நாற்றமடா. இவனும் குடிப்பான் போலிருக்கிறது" என்று ஒரு சிறுவன் இவனை மோந்து மூக்கைப் பிடித்துக்கொண்டு சுற்றிச் சுற்றி ஓடினுன்.

"அடே, நேற்று ரோட்டில் விழுந்து கிடந்தானே அவனு உன் அப்பன்?" என்ருன் ஒருவன்.

"சாராய சுப்பன் மகன்!" என்ருன் ஒரு பையன். உடனே எல்லாப் பையன்களும் 'சாராய சுப்பன் மகன்' 'சாராய சுப்பன் மகன்' என்று சொல்லிக் கொண்டு அவனைச் சுற்றிச் சுற்றி ஓடினுர்கள்.

"அடே, இவன்கூட நாம் எப்படியடா உட்காருகிறது?" என்ருர் சிலர்.

இப்படிப் பலவாறு கேலி செய்வதைப் பொறுக்கமுடியாமல் பையன் கண்களில் ததும்பின கண்ணீரை அடக்கி யடக்கிப் பார்த்தான். கடைசியில் தாங்கமுடியாமல்போய் திடீரென்று ஒன்றும் சொல்லாமல் வெளியே ஓடினுன். எல்லாரும் கூட்டமாய் அவன்பின் ஓடினுர்கள். தெருவு சேர்ந்ததும் ஒரே ஓட்டம் பிடித்தான். குழந்தைகள் எல்லாரும் இரைச்சல் போட்டுக் கொண்டு கொஞ்சதூரம் பின்னுல் ஓடினுர்கள். ஜெயராமன் ஒரு சந்துக்குள் திரும்பி மறைந்துபோனுன்.

* * *

"அம்மா!" என்று வீட்டில் தன் தாயார் மடியில் தலைவைத்து விம்மி விம்மி அழுதான்.

"என் அப்பனே! என் கண்மணியே! ஏன் அழுகிருய்? பள்ளிக்கூடத்தில் சேர்க்கமாட்டேன் என்ருர்களா?" என்று அவன் தாயார் அவனைக் கட்டி முத்தமிட்டாள். கேட்கக் கேட்கப் பையன் பதில் சொல்லமுடியாமல் அழுதுகொண்டே யிருந்தான்.

* * *

மறுபடி பள்ளிக்கூடத்தில் மணியடித்துக் குழந்தைகள் சேர்ந்ததும் வாத்தியார் 'எங்கே புதுப் பையன்' என்று விசாரித்தார்.

"ஐயா, அவன் ஓடிப்போய் விட்டான். அவன் வரமாட்டான்" என்று ஒரு பையன் சொன்னுன்.

"ஏன்?" என்று கேட்டார் வாத்தியார்.

எல்லாரும் கேலி செய்தார்கள். அவன் பாவம் அழுதுகொண்டு ஓடிப்போய்விட்டான்" என்று எல்லாரையும்விடச் சிறிய பையன் சொன்னுன்.

"குழந்தைகாள்! நீங்கள் செய்தது தவறு" என்று வாத்தியார் சொன்னுர். எல்லாரும் தலை குனிந்து கொண்டார்கள்.

"உங்களுக்குள் யாருக்கு அவன் வீடு தெரியும்?" என்று வாத்தியார் கேட்டார்.

'எனக்குத் தெரியும்', 'எனக்குத் தெரியும்' என்று பல பிள்ளைகள் எழுந்தார்கள்.

“போய் அவனைச் சமாதானப் படுத்திக் கூட்டி வரவேண்டும். யார் போவீர்கள்?” என்றார் வாத்தியார்.

“ஐயோ! அவன் அப்பன் அடித்துப் போடுவான்” என்றான் ஒருவன். மற்றவர்களும் ஒருவரையொருவர் பார்க்க ஆரம்பித்தார்கள். பிறகு ஒரு பையன், “நான் போய் அழைத்து வருகிறேன் ஐயா!” என்றான்.

“பேஷ் சுந்தரம்!” என்றார் வாத்தியார். “போய் அவன் தாயாருக்குச் சொல்லிக் கூட்டிக்கொண்டு வா” என்று சொல்லி அனுப்பினார்.

‘உதை தின்று வருவான்’ என்று பையன்கள் ஒருவருக்கொருவர் மெல்லச் சொல்லிக் கொண்டார்கள்.

* * *

சுப்பன் பெரிய குடிகாரன். இதனால் அவனுக்கு ஊரில் ‘சாராய சுப்பன்’ என்றும் பேர் வழங்கும். அவன் தகப்பனார் நல்ல பணக்காரராயிருந்தார். சிறு வயதிலேயே அவன் தாயார் இறந்து போய்விட்டாள். தகப்பனார் மகனை மிகச் செல்வமாய் வளர்த்தார். பையன் 16-வது வரையில் நன்றாய்ப் படித்தான். பிறகு கெட்ட சகவாசத்தினால் துர்வழக்கங்களைப் பயின்றான். தகப்பனார் அவனை முதலில் கண்டிக்கவில்லை. பிறகு கண்டித்தும் பயன்படவில்லை. 22-வயது ஆனதும் மணம் செய்து வைத்துப் பார்த்தார். அதனால் திருந்துவான் என்று நினைத்தார். அதுவும் பயனில்லாமல் போயிற்று. குடித்துவிட்டு வெட்கக் கேடான காரியங்கள் செய்வான். அந்த விசனத்திலேயே தகப்பனார் இறந்தார். தகப்பனார் இறந்தபின் சுப்பனின் சகாக்கள் அவனை முழுதும் கெடுத்தார்கள். தலைக்குமேல் கடன் பட்டான். கொஞ்சநாளில் சொத்தெல்லாம் பாழாயிற்று. சோற்றுக்கே திண்டாட்டமாயிற்று. கடன்காரர்களின் தொல்லையால் கோர்ட்டுக்கும் வக்கீல்களிடமும் போய் அலைந்ததில் நல்ல வேலை விண்ணப்பம் எழுதப் பழக்கமாயிற்று. சொத்து முழுதும் போய் ஆசை தீர்ந்தபின், சரக்கு புட்டிகள் விற்பதே ஒரு தொழிலாக வைத்துக்கொண்டு தினம் இரண்டு மூன்று சம்பாதித்து அதில் பாதிப் பணத்தைக் குடித்துவிட்டு மிஞ்சியதைச் சோற்றுக்கு மனைவியிடம் கொடுப்பான். ஒவ்வொரு நாள் அதுவுமில்லை. மனைவியை அடிப்பான். குடிவெறியில் ஒவ்வொரு நாள் அவளை வெளியில் தள்ளிக் கதவைத் தாள் போட்டுவிடுவான்.

சட்டிப்பானைகள் கழுவவும், துணிகளைக் கசக்கவும் ஒப்புக்கொண்டு சிறுதொகைக்கு மனைவி கூலி வேலை செய்யவேண்டியதாயிற்று. முதல் முதலில் தெரிந்தவர்கள் சிலர் வீட்டுக்குப்போய்ச் சம்பாதித்துக்காலம் தள்ளினாள். பிறகு எல்லார்வீட்டுக்கும் போனாள். கைக்குழந்தை ஒன்று. அதை ஜெயராமன் கையில் கொடுத்துவிட்டு வேலைக்குப் போவாள். அச்சமயம் சுப்பன் வீட்டுக்கு வந்தால் ஜெயராமன் கதி பரிதாபம். எங்கே உன் தாய் என்று உதைப்பான். குழந்தைக்கு அடிபடுமென்று ஜெயராமன் பதுங்கிப் பதுங்கி உடலெல்லாம் உதைவாங்கிக் கொள்ளுவான். “ஓ”! என்று வலி பொறுக்க முடியாமல் அலறியழுவான்.

ஒவ்வொரு நாள் சுப்பனுக்கு நல்ல புத்திவரும். பையனையும் குழந்தையையும் கட்டிக்கொண்டு அழுவான். இனி சாராயக் கடைப் பக்கம் போகவே மாட்டேன் என்று தீர்மானித்துக் கொள்ளுவான். ஆனால் அடுத்த சாயந்திரமே வீடு திரும்பி வரும் வழியில் சாராயக் கடையண்டை வரும்போது எல்

லாம் மறந்து போகும். தன்னை யறியாமல் கடைக்குள் போவான். மறுபடி பழைய கதைதான்.

* * *

கைக் குழந்தை கொஞ்சம் பெரி தானதும், எல்லாப் பையன்களும் பள்ளிக்கூடம் போவதைப் பார்த்து வந்த ஜெயராமனுக்குத் தானும் போய்ப் படிக்க வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று இனி குழந்தை பெரிதாயிற்றம்மா தானே விளையாடிக் கொள்ளும்; நான் பள்ளிக்கூடம் போகிறேனம்மா'' என்று தாயாரிடம் சொன்னான்.

''என் கண்ணே! நீ பள்ளிக்கூடம் எப்படிப் போவாய்? உனக்கு மேலே போட்டுக்கொள்ள சட்டை கூட இல்லையே. துணியெல்லாம் கந்தலாயிற்றே. எல்லாரும் உன்னைக் கேலிபண்ணுவார்கள். நீ நெஞ்சு உடைந்து போவாய்'' என்றாள்.

''இல்லை அம்மா. பக்கத்து வீட்டுக் கிட்டு ஒரு சட்டை கொடுக்கிறேன் என்று சொல்லுகிறான். கிழிசல்களையெல்லாம் தைத்துக்கொடு. கேலி செய்யமாட்டார்கள். செய்தாலும் என்ன? நான் பயப்படமாட்டேன். பள்ளிக்கூடத்திற்கு அனுப்பு'' என்று பையன் கெஞ்சினான்.

''ஐயோ! குழந்தாய், மாதம் ஒன்று இரண்டு சம்பளம் கேட்பார்களே'' என்றாள்.

''இல்லை, அம்மா! கோவில் பள்ளிக்கூடத்தில் குறைந்த சம்பளம். அதில் சேருகிறேன்'' என்றான்.

வெகு பாடுபட்டு இங்கும் அங்கும் கெஞ்சிக் குல்லாய் ஒன்று சம்பாதித்துக் கிழிந்துபோன விடத்திலெல்லாம் ஒட்டுப்போட்டுத் தைத்துப் பையனைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினாள். பிறகு நடந்ததை மேலே சொன்னோம்.

* * *

சுந்தரம் ஜெயராமனின் தாயைக் கண்டு ''ஜெயராமனைக் கூட்டிவரச் சொன்னா வாத்தியார்'' என்றான்.

''வேண்டாமப்பா. ஏழைகளுக்குப் படிப்பு என்னத்திற்கு?'' என்றாள் ஜெயராமன் தாயார்.

''வாத்தியார் கூட்டிவரச் சொன்னார். நான் அழைத்துப் போகிறேன், அனுப்புங்கள்'' என்றான் சுந்தரம்.

தாய் மகனைப் பார்த்தாள்.

''அம்மா! நான் போகமாட்டேன். எனக்குப் படிப்பு வேண்டாம்'' என்றான் ஜெயராமன்.

''இல்லை, ஜெயராமா, பயப்படாதே. பையன்களெல்லாம் உன்னைக் கூட்டிவரச் சொன்னார்கள். யாரும் கேலிசெய்ய மாட்டார்கள்'' என்றான் சுந்தரம்.

''மாட்டேன், வேண்டாம்'' என்றான் ஜெயராமன்.

''அப்பா, நீ போ. அவன் வரமாட்டான். குழந்தையைப் பார்த்துக் கொள்ள வீட்டில் யாருமில்லை. நான் துணி வெளுக்க வெளியே போனால் குழந்தையை ஜெயராமனிடம்தான் கொடுத்துப் போக வேண்டும். ஏழைகளுக்குப் படிப்பு என்னத்திற்கு? நீ போ, அப்பனே. வாத்தியாருக்குச் சொல்'' என்றாள்.

சுந்தரம் திரும்பிப் போய்விட்டான்.

ஜெயராமனின் தந்தை சுப்பன் அன்று வீட்டுக்கு வந்ததும் ''யார் உன்னை பள்ளிக்கூடத்திற்கு அனுப்பினது என்னை எல்லாரும் கேலி செய்யவா போனாய்?'' என்று

பெருங் கோபத்துடன் கூச்சலிட்டு ஜெயராமனை ஒரு உதை உதைத்தான். வலி பொறுக்கமுடியாமல் அவன் சுருண்டு கீழே விழுந்தான்.

“ஏன் குழந்தையை உதைக்கிறீர்கள்? நான்தான் அனுப்பினேன்” என்று மனைவி குழந்தைக்குப் பக்கத்தில் வந்தாள்.

பளீர் என்று அவள் தாடையில் ஒரு அறை அறைந்தான். அவள் அப்படியே சுவர்மேல் சாய்ந்தாள். இன்னொரு அடி அடித்தான். கீழே விழுந்தாள். சுப்பனுக்குக் கோபம் அதிகரித்தது. பக்கத்திலிருந்த உலக்கையை எடுத்தான்.

“எழுந்திரு!” என்றான்.

“ஐயோ!” என்று எழுந்தாள்.

“நான் குடிகாரன் என்று எல்லாரும் ஏசவா மகனைப் பள்ளிக்கூடம் அனுப்பினாய்?” என்று வீடு அதிரக் கத்தி உலக்கையைத் தூக்கினான்.

‘இல்லை, நாயனா! அம்மா அனுப்பவில்லை. நான்தான் போனேன். அவள் வேண்டாம் என்றுதான் சொன்னாள்” என்று ஜெயராமன் கதறிக்கொண்டு எழுந்து தகப்பன் கையைப் பிடித்துக்கொண்டான்.

“விடு” என்று உலக்கையால் ஒரு குத்துக் குத்தினான். அது பையன் விலாவில் பட்டு அவன் கீழே விழுந்தான். விழுந்ததும் ஒரு கையால் தன் வயிற்றை அமுக்கிக்கொண்டு, மற்றொரு கையால் தகப்பன் காலைப் பிடித்துக்கொண்டான்.

“இன்று என்னவானாலும் ஆகட்டும். நான் யாருக்கும் பயப்படவில்லை. தீர்த்துவிடுவதுதான் சரி!” என்று பையனை ஒரு உதை உதைத்துத் தள்ளி உலக்கையை வீசி மனைவியைப் பார்த்துப் போட்டான். அந்த அடி சுவரில் பட்டுத் தப்பினாள். இல்லாவிடில் மண்டை பொடியாய்ப் போயிருக்கும்.

இதற்குள் கூச்சல் கேட்டு அண்டை வீட்டுப் பெண்கள் சிலர் ஓடி வந்தார்கள். சிலர் இது எப்போதும் நடப்பதுதான் என்று காதில் போட்டுக்கொள்ளாமல் இருந்தார்கள். ஆனாலும் கூட்டம் சேர்ந்துவிட்டது. சுப்பன் உளறிக்கொண்டு வெளியே போய்விட்டான்.

பையன் நினைவு தப்பிக் கிடந்தான். ‘ஐயோ, என் குழந்தாய், உன்னை நான் கொன்றேனே!’ என்று தாய் கதறினாள். எல்லாரும் எடுத்துத் தூக்கிப் படுக்கவைத்துத் தண்ணீர் கொடுத்தார்கள். உயிர் துடி துடித்துக் கொண்டிருந்தது.

“பிழைப்பானோ தெரியவில்லையே!” என்றாள் தாய்.

“பாவி! இப்படி யடிக்கலாமா” என்றார்கள் எல்லோரும்.

“பாழுஞ் சாராயமே” என்றாள் ஒரு பாட்டி.

ஒரு நாழிகையில் கைகால் குளிர்ந்து போயிற்று. “ஐயோ ஜெயராம்!” என்று தாய் கூக்குரலிட்டாள். ஜெயராமன் துயரக் கூட்டினின்று விடுதலை அடைந்து அன்பே உருவமான அன்னை மடியில் போய்ச் சேர்ந்தான். அவனுக்கு இனி பள்ளிக்கூடம் என்னத்திற்கு?



இறந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகு இயற்றியான்.

# இதய ஒலி!

(வேலே - வில்லவன்)

●

அதோ! பொன்னுடை பூண்டு' பூரிப்பைப் புறத்தே காட்டும் புன்முறுவலோடு காட்சியளிக்கிறாள் ஒரு காரிகை. முத்துக்கள் மின்னுகின்றன அவள் மார்பிலே. அவைகளோடு போட்டியிடுகின்றன அந்த முல்லைப் பற்கள். களிப்பைக் கக்கிக் கொண்டிருக்கின்றன அவள் கண்கள். மழலை மொழி பேசிக்கொண்டு முன் நிற்கும் குழவிகளை அணைக்க எழுகிறது அந்த மலர்க்கரங்கள். வண்டமிழ் நாட்டின் வட எல்லையாக விளங்கும் வேங்கடத்தின் உச்சியை வருடிக் கொண்டிருந்தது, தென்றலிலே மெல்ல பறந்துகொண்டிருந்த அவள் கரிய கூந்தல். குமரி முனையிலே கூடும் கடல் நீர் அவள் கால்களைக் கழுவிக் கொண்டிருந்தது. ஆம். அவள் நம் தமிழ்த்தாய்தான். தங்கள் அன்னையின் அருகிலே எட்டுச் சுவடிகளோடும், எழுத்தாணிகளோடும் நிற்கிறார்கள், வள்ளுவர், இளங்கோ, முதலிய அடலேறுகள். அவளைப் புடைசூழ்ந்து நிற்கிறது பெருங் கூட்டம்!—" தமிழ்ச் சிங்கக் கூட்டம்!"

இது கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் கன்னித் தமிழ்த்தாய் அளித்த காட்சி.

அதோ ஒரு கோரக்காட்சி! கையிலே விலங்கணிந்தவளாய் காட்சியளிக்கிறாள் ஒரு காரிகை. ஆம். அது தமிழ்த்தாய்தான். தன் குழந்தைகளைக் கட்டித் தழுவிய கைகளிலே, தங்கக்காப்புகளை அணிந்து கொண்டிருந்த கைகளிலே இரும்புக் காப்புகள் காட்சியளிக்கின்றன. பொலிவிழந்து இருக்கிறது, பூரிப்பைப் பொழிந்து கொண்டிருந்த அவள் முகம் களிப்பைக் கக்கிக் கொண்டிருந்த அவள் கண்கள் கண்ணீரைக் கக்கிக்கொண்டிருந்தன. முத்துப் பற்களை மறைத்துக் கொண்டிருந்தன அவள் அதரங்கள். அந்த அதரங்கள் அசைந்தன. தழதழத்த குரலிலே வெளிவந்தன "ஆண்டேன் உலகிற்கே ஆட்சிமுறை நான் தந்தேன்; பூண்ட விலங்கைப் பொடியாக்க மாட்டீரா?" என்னும் சொற்கள்.

உணர்ச்சியை இழந்து—புகழைப் பறிகொடுத்து—மானத்தை முடக்கி வைத்து—பகுத்தறிவைப் புறக்கணித்து—வீரத்தை விரட்டி வாழ்க்கையில் வளைவேற்பட்டு நின்று கொண்டிருந்த தமிழர்கள் உள்ளத்தில் உருவிச் சென்று, வேதனையையூட்டி, வாட்டி வதக்கிற்று இச் சொற்கள்.

வாய் திறக்காது நின்றுகொண்டிருந்த அவர்களை வெகுளியோடு நோக்கினள் தமிழ்த்தாய்! கோபக் கனல் காட்சியளித்தது அவள் கண்களிலே. சொற்கள் வெளிவரலாயின.

"என் வயிற்றிலிருந்து வெளிவந்த வீரர் மரபிலே உதித்த என் மக்களே! பரம்பரைப் புகழைப் பாழ்படுத்தும் என் பிள்ளைகளே! கலைகளைக் குலைத்த என் குழந்தைகளே! மொழிக்கு இழுக்கினைத் தேடித் தந்த என் மக்களே! உங்களை ஈன்ற அன்னையின் கையில்

வேற்றவர் விலங்கிட்டிருக்கும் பொழுது, வாளெடுத்து வீராவேசத்துடன் போர்புரிந்து விலங்கொடித்து, எனக்கு விடுதலை தேடித் தராது, உருத்திராட்ச மாலையையா உருட்டிக்கொண்டிருக்கின்றன உங்கள் கைகள்? பாதையிலே குறுக்கிட்ட புலியோடு போராடி அதன் பற்களையும், நகங்களையும் மாலையாகத் தொடுத்து, மனைவிகளின் கழுத்திலே இட்டு மகிழ்ந்த நீங்களா இன்று பாதையிலே குறுக்கிடும் பூனைகளுக்கு பயப்படுகிறீர்கள்? அமர்க்களத்திற்கு அழைக்கும் முரசொலியைக் கேட்டவுடன் மனைவியிடம் விடைபெற்றுக்கொண்டு மகிழ்ச்சியோடு போர்க்களத்திற்கு விரையும் நீங்களா இன்று கேவலம், பல்லியின் சிற்றொலிக்குப் பயப்படுகிறீர்கள்? அந்நியரை உங்களடி பணியவைத்த நீங்களா இன்று அன்னக்காவடிகளின் அடிபணிந்துகொண்டிருக்கிறீர்கள்? அந்தோ'... பகுத்தறிவைப் பறிகொடுத்துநிற்கும் என் பிள்ளைகளே! என் உள்ளம் கொந்தளிக்கிறது! குமுறுகிறது! வேதனையை உண்டாக்குகிறது! வெகுளியை வெளியேற்றுகிறது!... என் குழந்தைகளே, என் முகத்தைப் பாருங்கள். உருக்குலைந்து, எலும்போடு ஒட்டி வாடியிருக்கும் என் உடலைப் பாருங்கள்! பாருங்கள்! நன்றாகப் பாருங்கள்!!......என் மடியிலே மழலை மொழியைப் பேசிக்கொண்டு வளர்ந்த என் மக்களே! உங்கள் தாயைப் பாருங்கள்! அன்பால் அரவணைத்து, அமுதினை யூட்டி வளர்த்த உங்கள் தாயை நீங்கள் மறந்து விட்டீர்களா? "தாயே!" என்று என்னை அழைக்க தயங்குகிறதா உங்கள் நாவு? வாளேந்தி போர் செய்து விரோதிகளை விரட்டி, என் கைகளிலிருக்கும் விலங்குகளையகற்ற அஞ்சுகிறதா உங்கள் கரங்கள்? என் சகோதரி என்று சிலர் சொல்லும் அந்த இந்தியை-சரியான முறையில் உறவில்லாத சிற்றன்னையை அரவணிக்க ஆசைப் படுகிறதா உங்கள் கரங்கள்? அவள் மடியிலே சாய நாடுகிறதா உங்கள் மனம்? ஐயகோ! என் மக்களே! பெற்ற தாயைப் புறக்கணித்து, சிற்றன்னையின் அணைப்புக்குள்ளாகவா விரும்புகிறீர்கள்? கூறுங்கள் என் குழந்தைகளே! நான் பூண்டிருக்கும் விலங்கைப் பொடியாக்கி, என்னைப் பொலிவோடு, புகழோடு, பெருமையோடு பாரில் இலங்கவைப்பீர்களா, அல்லது அந்த இந்தியை நந்திப் பிடியாய் பிடித்துக்கொண்டுதானிருப்பீர்களா?......பகருங்கள் பாலர்களே! உரையுங்கள் வீரர் திலகங்களே!...'

விடாது இடி முழங்குவதைப் போல் கொதிப்போடும் கோபத்தோடும், ஆவேசத்தோடும் அருளோடும் அறைகூவவிட்டாள் அன்னை, இருபதாம் நூற்றாண்டிலே வாழும் தமிழர்களைப் பார்த்து.

உதிரம் துடிக்க, கைகள் வாளேந்த, கண்கள் கனலைக்கக்க, கால்கள்

---

## நகைச்சுவைக் குறிப்பு

ஒருவன்:—(சலிப்புடன்) நாமெல்லாம் இந்த உலகிலே பிறந்து என்ன பலனைக்கண்டுவிட்டோம்? அமெரிக்காவில் நூறு மாடி கட்டடமெல்லாம் இருக்கிறதாம் அதெல்லாம் பாக்ககொடுத்து வைக்கவில்லையே!

நண்பன்:—மனிதனைகப் பிறந்த நீ ஒரு யானையாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்போதாவது உன் எண்ணம் ஈடேறக்கூடுமல்லவா!

—K. சொர்ணவேலு, திருவாரூர்.

---

களத்தை நோக்க, தமிழ்ச் சிங்கக் கூட்டம்— இலட்சக் கணக்கான இளைஞர்கள், அன்னையே! புழுதியிலே புரண்டுகொண்டிருந்த எங்களுக்கு புத்திகற்பித்து பஞ்சணையைக் காட்டிய பாசத்திற்குரிய மாதாவே! இனி தாமதம் செய்யோம். நிலையை நன்கறிந்தோம். குலையாக்கன்னிப் பருவமுள்ள தங்களோடு போட்டிபோடும் பாடையேறிய பாடையான, இறந்த இந்தியை வண்டமிழ் நாட்டின் வரம்பிற்கு வெளியே விரட்டியடிப்போம். பைந்தமிழ் நாட்டிலே அதைப் புகுத்தப் பார்க்கும் புல்லர்களின் முயற்சியைப் பூண்டோடு அழிப்போம். இறந்து போன இந்தியின் அலையும் ஆவியின் அதட்டலுக்கு அஞ்சமாட்டோம். கொலைவாளினை எடுத்துவிட்டோம். மிகுகொடியோர் செயலை அறுத்தெறிய! மறத் தமிழர்கள் நாங்கள். அற வழி ஒழுகுகிறவர்கள் நாங்கள் அன்னையே! தங்கள் கைகளிலிருக்கும் விலங்கினை ஒடித்தெறிய இதோ விரைகிறோம். வரலாற்று ஏடுகளில் ஒரு பெரு நிகழ்ச்சியைப் பொறிக்கப் போகிறது எங்கள் வாளும், வீர உதிரமும்! ஆம். இது நிச்சயம்!..... என்று வீர முழக்கம் புரிந்தார்கள். அவர்களை அறை கூவலிட்டு அழைக்கும் அமர்களத்திற்கு விரைந்தார்கள்.

இது வெறுங் கனவல்ல! வாயளவிலே நின்றுவிடும் வேதபாராயணமுமல்ல! ஏட்டளவிலே தீட்டப்படும் திட்டங்களுமல்ல! உள்ள எரிமலை கன் கக்கிய கனல்கட்டிகள்!

அடையப்போகும் வெற்றியின் நிச்சயத்தை உலகிற்கெடுத்தோதும் இளங்காளைகளின் இதய ஒலி!!



# தமிழும் தமிழரும்!

தே. சவரிமுத்து, திருச்சி.

நம்மைச் சுற்றிலும் உள்ள தமிழ் மக்களை நோக்குவோம். அவர்கள் பேசுவது தமிழ்மொழியா? அல்லது வேறுமொழியா? தமிழும் அல்ல; ஆங்கிலமும் அல்ல வடமொழியும் அல்ல; மூன்றும் கலந்த ஒரு கலப்பு மொழி; ஒருவரும் அதற்கு இன்னும் பெயர் வழங்கவில்லை

பிறமொழிகளினின்றும் பிறவாத தனிமொழி தமிழ். தனித்து இயங்கும் திறமை வாய்ந்தது - தனித்து இயங்க வந்ததும் வரவேண்டியதும் ஆன் மொழி தமிழ் ஆனல் தமிழ் எந்நிலையில் இருக்கிறது நம் நாட்டில்? தனித்தமிழாக நிலவுகின்றதா? தனித்தமிழ் என்ற சொல்லின் பெருமையே அருகி வருகிறது நம் தமிழ் நாட்டில். கல்லூரி மாணவன் முதல் கற்றுத்தெளிந்த பெரியோர்கள்வரை பேசப்படுவது தமிழ் மொழி அல்ல. தமிழ் நாட்டிலே தமிழ் மக்களிடையே தமிழ் மொழிக்கு இந்நிலை ஏற்பட்டிருக்கிறது.

ஒரு பெரியவர் தன் நண்பரை நோக்கி உரைக்கின்றார்; "சார் உங்க சன்னுக்கு (மகனுக்கு) மேரேஜ் (Marriage) ஆயிடுச்சா இல்லையா?" விடைகூறுகின்றவர் உரைக்கிறார்:—"இன்னும் இல்லையே சார் இப்போதான் அவன் காலேஜ் படிப்பையே முடிச்சுட்டு வந்திருக்கிறான்"

"பிரதர், (Brother) தமிழ் மீட்டிங்கிலே பேசினரே, எவ்வளவு ஜோராக இருந்தது அவருடைய ஸ்பீச் (Speech) ஆமாங்க பிரதர் ரொம்ப எக்சலென்ட் (Excellent) டா இருந்தது" சொற்பொழிவு கேட்ட தமிழ் மாணவரின் உரையாடல் இது.

இவ்வாறுதான் தமிழ்த்தாய் இன்று நம் நாட்டிலே நிலவிவருகின்றாள். யாண்டு நோக்கினும் இந்நிலையே. தமிழிலே 'மணம்' என்ற சொல் இல்லையா? Marriage என்று தானா சொல்லவேண்டும். வெகு 'அழகாக' 'அருமையாக' இருந்தது என்று தமிழில் பேசினல் நாவினிக்காதா? - ரொம்ப (Excellent) ஜோரா இருந்தது என்றுதான் சொல்லவேண்டுமா? இதுவா தமிழ் மொழி?

தமிழிலே சொற்கள் இல்லையா? எப்பொருளைக் குறிக்க சொற்கள் இல்லை? எத்தொழிலை உணர்த்த சொற்கள் இல்லை? எச்சொல்லும் இதன்பால் உள. தனித்தியங்கும் திறன் தமிழ் மொழிக்கு இருக்க ஏன் பிற மொழிகளை அதனோடு கலத்தல் வேண்டும்? தமிழ்மொழியை வளர்க்கவேண்டும் என்ற கருத்தா? தமிழ்த் தாயின் சிறப்பை - தந்நிகரற்ற தன்மையை சிதைக்கும் எண்ணமா?

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆங்கில, வடமொழிக் கலப்பு அவசியம் என்று சிலர் கூறுகின்றனர். ஆங்கில மொழி பலமொழிகளின் கலப்பினல்தான் தற்போது உலக மொழியாக விளங்குகின்றது என்று

பறைசாற்றுகின்றனர் பலர். ஆங்கில மொழி பலமொழிகளின் கலப்பினால் சிறந்த நிலையை அடையவில்லை. பிறமொழிகளை ஆங்கிலத்தோடு கலந்ததால் ஆங்கிலம் முன்னேற்றம் அடையவில்லை. பிறமொழிக்கருத்தினால் தான் ஆங்கில மொழி முன்னேறி இருக்கின்றது.

பிறமொழி இழைகளை ஆங்கில நூலாக்கி-ஆங்கில சாயத்தைப் பூசி ஆங்கில ஆடையாக செய்து கொண்டதனால் அது சிறப்புற்றோங்குகிறது. எல்லாவற்றையும் ஆங்கிலமயமாக்கியதால் அம்மொழி உயர்வுற்றது. மேலும் ஆங்கில மொழி இன்று உலகமொழியாக விளங்குதற்குக் காரணம் அம்மொழியின் உயர்வல்ல - ஆங்கிலேயர்களின் ஆட்சியே காரணம். மன்பதையில் பாதியை அவர்கள் ஆண்டமையால் ஆங்கிலமொழியை அனைவரும் கற்கும் கட்டாயம் ஏற்பட்டது. அதனால் ஆங்கில மொழியும் முன்னேறி வந்தது. நாளைக்குத் தமிழனுக்குத் தனியரசு கிடைத்தால் ஆங்கில மொழியின் நிலையே தமிழுக்கும் ஏற்படும். தமிழ்நாடு உலகிலுள்ள பல்வேறு நாடுகளோடும் தொடர்பு கொள்ளும் - தமிழை உலகமெல்லாம் அறியும். தமிழும் உலகமொழியாகும்.

ஆங்கிலத்திற்கு தனித்தியங்கும் தன்மை இன்மையினால்—சொற்கள் பல இல்லாமையால் பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கினர். ஆனால் தமிழ் மொழிக்கோ தனித்தியங்கும் தன்மை உண்டு. பிறமொழியின் துணையின்றியே தமிழ் தனித்து நிற்க முடியும்.

தமிழ் மொழியில் பிறமொழிச் சொற்களை கலப்பதானது கையில் வெண்ணை இருக்க நெய்க்கு அயலார் வீடுதேடும் தன்மையதே. நம்மிடை அருமையான தமிழ்மொழி, எப்பொருளும் கொண்ட உயர் தனிச் செம்மொழி இருக்க அதை ஒழுங்காகப் பேச,எழுதத் தெரியாது பிறமொழிச் சொற்களைக் கடன் வாங்கி தமிழோடு அதையும் கலந்து தமிழின் தனிப்பண்பையே கெடுத்தல் ஏனோ?

ஒரு நிறைகுடப் பாலிலே சிறு துளி நஞ்சு கலந்தாலும் பாலின் வெண்ணிறம் மாறாவிடினும் அதன் தன்மை மாறி அதுவும் நஞ்சாதல் தெளிவன்றோ? அஃதேபோல் தமிழ் மொழி பாலோடு வடமொழி அல்லது ஆங்கில மொழி நஞ்சையோ கலந்தால் தமிழ்ப்பாலும் நஞ்சாகி விடும். பிறமொழிகளைக் கலந்து பேசுவது இனிமையாகத் தோன்றலாம். ஆனாலும் அது நஞ்சை நலமென்று எண்ணுவதையே ஒக்கும்.

ஆகையால் தமிழ் மொழியில் பிறமொழிகளைக் கலத்தல் தகைமையுடைத்தன்று; பிறமொழியிலுள்ள கருத்துக்களை தமிழ் மயமாக்க வேண்டும். இதுவே தமிழ் வளர்ச்சிக்கு இன்றியமையாதது. இதையொட்டியே பாரதியும்,

பிற நாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்

என்று கூறிப் போந்தார்.

பிறமொழிக் கலப்பினால் தமிழ் வளர்ச்சியடையும் என்று அவர் ஒருபோதும் கூறவில்லை. பிறமொழிக் கலப்பினால் தாழ்வுறுவதையே நாம் இன்றும் கண்டு வருகிறோம். பிறமொழிக் கலப்பினால் தமிழ் எவ்வளவு தூரம் முன்னேறி இருக்கிறது என்று பாருங்கள்—பழங்காலத் தமிழைத் திரும்பி நோக்குங்கள்—தமிழ் மொழியின் சிறப்பு தென்படும். அதேமுறையில் தமிழ்மொழி இருந்திருக்குமானால் தமிழ்மொழி இன்று உயர்நிலை எய்தியிருக்கும். இடைக்கால பிறமொழிக் காற்றின் சுழலாலும் தற்காலத் தமிழர் சிலரின் பிறமொழிக்

கலப்பினுலும் இன்றையத் தமிழ் தாழ்வுற்ற நிலையிலேயே விளங்கு கின்றது.

தனித்தமிழில் பேசுவது—எழுது வது குறுகிய மனப்பான்மை எனச் சிலர் கருதுகின்றனர். எது குறுகிய மனப்பான்மை? ஒரு மொழியை ஒழுங்கான முறையில் பேசுவதா குறுகிய மனப்பான்மை? ஒரு மொழியில் புலமையடைவதா குறு கிய மனப்பான்மை? தன் தாயைப் போற்றுவதா குறுகிய மனப்பான் மை? கடன் வாங்கிப் பிழைக்காமல் சொந்தத் திறமையால் உயர்வடை வதா குறுகிய மனப்பான்மை? பல பயனற்ற மொழிகளைக் கற்று பய னற்று வாழ்தலை யொழித்து ஒரு மொழியை—உயர்தனிச் செம் மொழியாகிய தமிழைக் கற்பதா குறுகிய மனப்பான்மை? பிற நன் மொழிகளை இகழ்வது குறுகிய மனப்பான்மை; (ஹிந்தியை இகழ் வது குறுகிய மனப்பான்மையன்று. ஏனெனில் அது நன்மொழியல்ல. இலக்கண இலக்கியமற்ற மொழி) பிறமொழியை அழித்து தன் மொழியை வளர்ப்பது குறுகிய மனப்பான்மை; பிற மொழிகளின் மூலம் தன் மொழியை வளர்ப்பதே போற்றற்பாலது உணவுப்பொருள் ஒன்றேதான். (கொழுப்பு, மாவு போன்றவைகள்) ஆனல் சிலர் அதை ரொட்டியாகவும், சிலர் அதை சிறிய முறையில் சமைத்து உணவாகவும் தங்கள் தங்கள் முறைக்கேற்றவாறு அருந்துகின்ற னர். அதுபோல்தான் பிறமொழிக் கருத்துகளை எடுத்தாள்வதும்.

சிலர், “பலகாலம் பேசி, எழுதி வந்தமையால் இனி அதை மாற்று தல் இயலாது. அவ்வாறே விட்டு விட வேண்டியதுதான்” என்கின் றனர். புரட்சியே புத்துலகின் வித்து. புரட்சிஎன்பதற்கு மாற்றம் என்றே பொருள். பழம் வழக்கத்தை மாற் றியே தீரவேண்டும். பழையதையே புதியதாக மாற்றியமைத்தல் வேண் டும். இத்தகைய மாற்றம் இன்றேல் இன்றைய உலகம் எவ்வாறு இந் நிலையை அடைந்திருக்க முடியும்? இத்தகைய மாற்றமே மொழியிலும் ஏற்பட வேண்டும். பழக்கத்தை வழக்கமாக்காது தடுத்தல் வேண் டும். பிறமொழிக் கலப்பலை நீக்கல் தமிழர்களின் தலையாய கடமை.

நாகரீகத்தின் வாழ்விடம் என்று கருதப்படும் நகரங்களில்தான் கலப் புத் தமிழ் மொழி பேசப்படுகிறது. கிராமங்களில் எவ்வளவோ அரு மையான தமிழ்ச்சொற்கள் வழங்கு கின்றன; தனித்தமிழ் தாண்டவ மாடுகிறது. ஆனல் நவ நாகரீகத் தில் உருண்டுகொண்டிருக்கும் நகர மக்கள் பேச்சு கலப்படமாக விளங்குகின்றது. இவ்விழிநிலை இன்றுமுதல் மாறவேண்டும். எவ் விடமும் தனித்தமிழ் மயமாகவே விளங்கல் வேண்டும்.

தமிழ் மக்களே! தமிழ்ப் பெரி யீரே!! தமிழ் மாணவர்களே!!! எழுங்கள்! நந்தமிழின் நலங்காக்க எழுங்கள்! தனித்தமிழின் பெரு மையை நிலைநாட்ட எழுங்கள்! எந்த வடநாட்டான் தன் இந்தி மொழியோடு தமிழைக் கலந்து பேசியும் எழுதியும் வருகிறன்? எந்த ஆங்கிலேயன் தன் மொழி யோடு தமிழ் மொழியையோ அன்றி வடமொழியையோ கலக் கின்றன்? நீ மட்டும் ஏன் இச்செய லின் முனைந்து நிற்கின்றய்?

பல மொழிகளுக்குத் தாயாக விளங்கும் தமிழ்மொழிக்கா இன்று இந்நிலை ஏற்பட்டுள்ளது? அன்று அரியணையமர்ந்து ஆட்சி செய்த அன்னையா இன்று தம் மக்களிடை யே இத்தனை அல்லலுறுகிறள்? தமிழா உன் கண்கொண்டு நோக்கு இப்பரந்த தமிழ் நாட்டை! தமிழ் நாட்டு வானெலி நிலையத்தில்

தமிழ்ச் செய்தி தொடங்கு முன்னும் இறுதியிலேயும் 'ஜெய் ஹிந்த்' 'வந்தேமாதரம்' என்ற ஒலி முழக்கம் கேட்கின்றதே! அது தேமதுரத் தமிழோசையைக் கேட்ட உன் செவிக்கு இனிமையாகவா இருக்கின்றது? கலைக் களஞ்சியத்தின் பேரில் தமிழ் மொழிக்கு F ஒலி Z ஒலிக்காக அவ்வெழுத்துக்களைப் பயன் படுத்த வேண்டும் என்று கூறும் கயவர்களை நோக்கு!

"நான் தமிழன்; என் மொழி தமிழ்; என் உடல் தமிழ் உடல்; என் மூச்சு தமிழ் மூச்சு; தமிழ்ப் பணியே என் உயிர்ப்பணி" என்ற எண்ணம் ஒவ்வொரு தமிழ் மகனின் உள்ளத்திலும் கிளர்ந்தெழல் வேண்டும்.

பெயரில்மட்டும் தமிழனல்ல; செயலில் - எண்ணும் எண்ணத்தில் - உண்ணும் உணவில் - உடுக்கும் உடையில் - நடக்கும் பண்பாட்டில்-பேசு மொழியில்-செய்யும் தொண்டில் தமிழர்களாக விளங்க வேண்டும் நாம். தேமதுரத்தமிழோசையை உடல் முழுவதும் நாடு முழுவதுமாகப் பரப்பல் வேண்டும். இதுவே தலையாயத் தொண்டு,

ஆங்கிலத்தைக் கற்கலாம் - பிற நன்மொழிகளையும் கற்கலாம் - எதை நோக்கி - தமிழைவளர்க்கும் நோக்கோடு - தன் அறிவு நிறம்படும் பொருட்டு. எம்மொழியைக் கற்கையிலும் நந்தமிழன்னையை மறத்தல் கூடாது.

தனித்தமிழின் தன்மை கெடாதவாறு - கன்னித்தமிழில் கறைபடியாதவாறு - முத்தமிழின் முதன்மை முறியடிக்கப் படாதவாறு பிற மொழிகளைக் கற்கலாம். நம்தாயை முதலிலே பேணிவளர். பின் அவள் கட்டளையின் மேல் பிறமொழிகளைக்கல். தமிழில் விஞ்ஞானச் சொற்கள் இல்லை என்பது உண்மைதான். அறிஞர்கள் புதுச்சொற்கள் உண்டாக்கும் வரையிலும் ஆங்கிலச் சொற்களைப் பயன்படுத்தல் குற்றமாகாது. ஆனல் தமிழில் சொல்லிருக்க பிறமொழிச் சொற்களைக் கலத்தல் பெருந்தவறு என்பதை ஒவ்வொருவரும் கருதல் வேண்டும்.

வாழ்க தமிழ்! வாழ்க தமிழினம்!!
வாழ்க தமிழ் நாடு!!!



## தொன்மை தமிழே வாழி!

| | | | |
|---|---|---|---|
| அகிலம் | தோன்றிய | அன்னுள் | முதலாய் |
| ஆன்ருேர் | போற்றிய | அமிழ்தார் | தமிழே! |
| இலக்கண | இலக்கியம் | இயைந்த | தமிழே! |
| ஈடிலா | எந்தன் | பீடுயர் | தமிழே! |
| உண்மை | உணர்வை | உணர்த்தும் | தமிழே! |
| ஊனும் | உயிரும் | உருக்குந் | தமிழே! |
| எல்லோ | ராலும் | ஏற்றும் | தமிழே! |
| ஏனைய | மொழிபல | ஈன்ற | தமிழே! |
| ஐந்து | இலக்கணம் | அமைந்த | தமிழே! |
| ஒப்பில் | லாத | முப்பாற் | றமிழே! |
| ஓடி | ஒழிந்திடா | நீடுயர்த் | தமிழே! |
| ஔவை | போற்றிய | செவ்விய | தமிழே! |
| நாளும் | சிறப்பாய் | நீடு | வாழ்கவே! |

—வ. அழகிறை, வேலூர்.

# அறிஞர் உலகம்!

********** *********

[பழம் நீ]

உலகத்தில் மக்களிடம் அன்பு கொள்பவனே உண்மையாக வாழ்பவன் ஆவான்.

—அந்தோனி

அடக்கமும் அன்பும் துன்பத்தால் கற்றுக்கொள்ளப்படும்.

—ஜார்ஜ் எலியட்

அறத்தின் வழிநில்! அஞ்ச வேண்டாம்! உன் இலட்சியமெல்லாம் உன் நாட்டை, உழைப்பை, உண்மையைப் பற்றியதாகவே இருக்கட்டும்.

—ஷேக்ஸ்பியர்

உயர்ந்த உண்மை மலர்வது ஆழ்ந்த அன்பிலேதான்

—ஹீன்

முதலில் ஒரு குற்றம் செய்தவன் அதை மறைக்கப் பொய்யுரைக்கும் பொழுது இரண்டு குற்றங்கள் செய்தவனுகிருன்,

—வாட்ஸ்

எவ்விதம் இறந்தான் என்பதன்று கேள்வி - எவ்விதம் வாழ்ந்தான் என்பதே கேள்வி.

—டாக்டர் ஜான்சன்

நூலறிவானது பேசும் - மெய்யறிவானது கேட்கும்.

—ஹோம்ஸ்

வாழ்வானது யோசிப்பவனுக்கு இன்ப நாடகமாகத் தோன்றும், உணர்பவனுக்கோ துன்ப நாடகமாகத் தோன்றும்.

—வால்ப்போல்

பிறரை அறியாததை வைத்து மதித்தல் ஆகாது, அறிந்துள்ளதை எவ்வாறு அறிந்திருக்கின்றனர் என்பதை வைத்தே அவர்களை மதிக்கவேண்டும்.

—பிரெஞ்சுப் பழமொழி

இப்பொழுது விழித்து எழுந்தால் எழுங்கள் அல்லது எப்போதுமே விழுந்து கிடங்கள்.

—மில்டன்






### காட்சி 5

### சோழ அரண்மனை அந்தப்புரத்தில் ஒருபாகம்

**மார்த்தாண்டன்** :—சரியா ராத்திரி பத்து நாழிகைக்கு வருகிறேன். அந்தப்புரக் கதவைத் தட்டுகிறேன். திறக்கவேண்டும்.

**ரூபாவதி**:—அப்படியே இளவரசே!

**மார்த்** :—பாலாவதியிடம் என்னைப் பற்றி சொல்லியிருக்கிருயா ?

**ரூபா** :—ஓ! (தலையை அசைக்கிருள்.)

**மார்த்** :—சரி. இரவு கதவைத் தட்டும்போது கவனமாக......உம் ? (ரூபாவதி சரி என்று தலையை அசைத்துவிட்டுப் போகிருள்.)

### காட்சி 6

### சோழ அரண்மனை அந்தப்புரம்

(உள்ளே விலாசினி வரும்போது ரூபாவதி முறைத்துப் பார்க்கிருள். விலாசினியும் முறைத்துப் பார்த்து விட்டு உள்ளே ராஜகுமாரியிடம் சென்று)

**விலாசினி** :—அம்மா ! ஒரு விஷயம் ...(மெதுவாக) ரூபாவதி நடந்து கொள்வதைப் பார்த்தால் எனக்கு ரொம்ப சந்தேகமாயிருக்கு. எப் போப்பார்த்தாலும் என்னை முறைத்துப் பார்க்கிருள்.

**பாலாவதி** :—எதற்கு இப்படிப் பயப்படுகிருய்? (சுற்றிலும் பார்த்து விட்டு) நாளை இரவே நாம் அப்பாவைப் பார்க்க புறப்படுகிறோம். அதுவரையில் நயமாக நடந்துகொள். வீணில் கோபமாய் நடந்துகொண்டு ஆபத்தில் அகப்பட்டுக்கொள்ளாதே.

**விலா** :—ஊம்...(ஏதோ யோசித்து விட்டு சிரிக்கிருள். பாலாவதி மெது வாக கைகளை முறுக்கிவிட்டு)

**பாலா** :—சரி. எனக்குத் தூக்கம் வருகிறது. நீ போய்ப் படுத்துக் கொள்.

**விலா**:—என்னங்கம்மா ராஜகுமாரி இளவரசர் வருகிறநேரமாய்விட்டது. நீ வெளியே போய்விடுன்னு சொல் லிடுங்கம்மா. அதை விட்டுவிட்டு பேசிக்கிட்டிருக்கையிலேயே தூக்கம் வரதுன்னு ஏமாத்திறீங்களே !

**பாலா** :—(சிரித்துவிட்டு)விலாசினி நீகூடவா என்னைத் தப்பாக எடுத் துக் கொள்கிருய்?

**விலா** :—உக்கும் போங்கம்மா. (எழுகிருள்.)

பாலா :—சரி, வக்கிரம்! பாவம் காத்துக்கொண்டிருப்பான். சீக்கிரம் புறப்படு. (விலாசினி சிரித்துக் கொண்டே போகிறாள். பாலாவதி குதூகலத்துடன் எழுந்து ஓடி பாடி விளையாடுகிறாள். விஜயன் தன்னைத் தேடி வருவதைக்குறித்து ஆனந்த மாகப் பாடுகிறாள். வானத்து சந்திரனைக் கவனித்தவண்ணம் நிற்கும் போது பின்னால் மார்த்தாண்டன் அடிமேலடி வைத்துச் செல்கிறான். பாலாவதி அருகில் சென்று பின்னே நிற்கிறான். இதேசமயம் விஜயனும் வருகிறான். மார்த்தாண்டனைக் கண்ட விஜயன் திடுக்கிட்டு மறைவில் நின்று கவனிக்கிறான்.)

மார்த் :—இளவரசி வானத்துச் சந்திரனுடன் ஏது தனிமையில் இப்படி...(பாலாவதி திடுக்கிட்டுத் திரும்புகிறாள்.) முக்கியமான சம்பாஷணையோ? மன்னிக்கவும்...(பாலாவதி வெறுப்புடன் வேறு திசையில் திரும்புகிறாள்.

மார்த் :—மன்னிக்கவும்.

பாலா :—மன்னிக்கவும். பேச விரும்புவதை நாளைக் காலை பேசிக் கொள்ளலாம்.

மார்த் :—அப்படி சொல்லக் கூடாது. பாலாவதி...வந்த விஷயம் என்னவென்று யோசியாமல்......

பாலா :—யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை. (கோபமாக)

மார்த் :—(தானும் கோபமாக) யோசித்துத்தான் ஆகவேண்டும். யாரிடத்தில் யார் எந்த இடத்தில் என்ன நிலைமையில் இருந்து பேசுகிறார்கள் என்று (ஏளனமாக) இளவரசியார் யோசித்துத்தான் ஆகவேண்டும். (விஜயன் பல்லைக் கடிக்கிறான். பாலாவதி கிலியுடன் விழிக்கிறாள்.) பாலாவதி! என் மனசிலே இருக்கும் ஆசையை நீ அறிவாய். என் ஆசைப்படி நடப்பதால் உனக்கென்ன குறைவு ஏற்பட்டுவிடக்கூடும்?

பாலா :—குறைவு ஏற்படுவதும் ஏற்படாததும் நாட்டு மக்களுடைய தீர்ப்பைப் பொறுத்தது. என் திருமண விஷயம் நாட்டு மக்களுடைய இஷ்டப்படியல்ல; வா முடிவுசெய்ய வேண்டும். அதற்கு மாறாக நடப்பதால் உமக்குமாத்திரமல்ல. நாட்டு அரசிற்கே பழிசேரும்.

மார்த் :—நாம் செய்யும் முடிவு தான் மக்கள் செய்யும் முடிவு. இது நீ அறியாததா...பாலாவதி!

பாலா :—(கலக்க மடைந்தவளாய் யோசித்துக்கொண்டே) என்னை மன்னியுங்கள். இன்னும் இரண்டொரு தினங்களில் யோசித்து என் சம்மதத்தைத் தெரிவிக்கிறேன். இன்று தான் முதன் முதலாக இந்தப் பேச்சை எடுத்துள்ளீர்கள். இன்றைக்கே துணிவாக...(என்று நாணுவதுபோல் தலைகுனிகிறாள்.)

மார்த் :—ஆஹா! அப்பொழுதே அறிவேன். உன் சம்மதம் பெறுவது நிச்சயம் என்று. இரண்டு தினங்கள் என்ன; இரண்டு வாரங்கள் வேண்டுமானாலும் எடுத்துக்கொள். சரி நான் வருகிறேன். பாலாவதி! இப்படி இரவிலே தொந்திரவு செய்தேன் என்று......

பாலா :—அப்படி ஒன்றுமில்லை. (வெளியே செல்கிறான் மார்த்தாண்டன். பாலாவதி கட்டிலினருகில் உட்கார்ந்து கட்டிலில் சாய்ந்தவண்ணம் அழுகிறாள்.) ஐயோ. பாவிச் சண்டாளர்கள் கொடுமை என்னால் தாங்க முடியவில்லை. பாண்டிய இளவரசரும் என் கடிதத்தை புறக் கணித்துவிட்டார் போலிருக்கிறது. நான் இங்கே தங்கியிருந்துதான் என்ன பிரயோஜனம்...உண்மையில்

என்மீது அவருக்கு அன்பு இல்லையா? இல்லாவிட்டால், நம் அரண்மனைக்கு வந்ததுமுதல் கனிந்தபார்வையுடன் என்னை பலதடவைகள் நோக்கி புன்னகை செய்தாரே. அவர் செய்த புன்னகை அன்பின்மேலிட்டுத்தானு? அல்லது என் கதியற்ற நிலையைக் கண்டு செய்த ஏளனச் சிரிப்பா?

**விஜயன் :**—(மறைவிலிருந்த வண்ணமே) இருக்கவே இருக்காது.

**பாலா :**—ஹா! யாரது!

**விஜ :**—(மறைவிலிருந்து வெளியே சென்றவண்ணம்) யாராயிருக்கக் கூடும்?

**பாலா :**—இளவரசே!

**விஜ :**—பாலாவதி!...(கையருகில் சென்று) ஹா!... மன்னிக்கவும்... இளவரசி! (சிரிக்கிருன் அவளும் சிரிக்கிருள். சிறிது யோசித்து கவலை தோய்ந்த முகத்துடன்)

**பாலா :**—' இளவரசி '... துன்பம், வேதனை என்ற இரண்டு பாடங்களைத் தவிர வேறெதையும் எனக்குக் கற்றுக்கொடுக்காத சொல்.

**விஜ :**—' துன்பம் ' — தன்மை கெட்ட வார்த்தை. தான் புகும் இடம் இன்னதென்று யோசித்தறியும் தராதரம் கெட்ட சொல். குதுகலமும் கோலாகலமும் நிறைந்த மன்னர் மனையிலும் எட்டிப் பார்க்கும் துணிச்சல்... பாலாவதி... (கைகளை நீட்ட பாலாவதி பிடித்துக்கொள்கிருள்.)

**பாலா :**—சுவாமி! (விஜயன் அருகே நகர்ந்து அவன் தோளில் சாய்கிருள்.)

**விஜ :**—கண்ணே. பாலாவதி... தோளைப் பிரிந்து கைகளைக்கோர்த்து இங்குமங்குமாக ஆட்டிக்கொண்டே சந்திரனைப் பார்க்கிருன்) பாலாவதி, சந்திரனைப் பார்த்தாயா?

**பாலா :**—சுவா. (தன் இருகைகளையும் விஜயன் தாடையிலும் இரு கன்னங்களிலும் வைத்து மூடி.) இதோ பார்த்துக்கொண்டிருக்கிறேனே!

**விஜ :**—(சிரித்தவண்ணம்.) என்ன கவனமாக உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிருன். கவனித்தாயா?

**பாலா** —பூர்ணசந்திரன். பாவம் ...மிகப் பொல்லாதவன்.

**விஜ :**—ஏன் அப்படி சொல்கிருய்?

**பாலா :**—அவன் மூடச்செயலைப் பார்த்தீர்களா? உங்கள் பால்மனதின் வெண்மைநிறத்தை தானும் பெற வேண்டும் என்று ஆசைப்பட்டு உங்களிடம் போட்டிப்போடுகிருன். அதுவும் என் முன்னலேயே உங்களைக் காட்டிக்கொடுத்துவிட வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தினுல் பூர்ணப் பிரகாசத்துடன் விளங்குகிருன்.

**விஜ :**—கண்ணே! அறியாமல் சொல்கிருய். (சந்திரனைக் காட்டி) அவனிடத்தில் பூர்ணப் பிரகாசம் இருக்கிறதென்று சொல்கிருய். உன் முக அழகையும், பிரகாசத்தையும் கண்டு உன்னுடன் போட்டியிடத் துணியக்கூடத் தன்னிடம் வலுவில்லையே என்று எண்ணினுன். பாவம். அதே ஏக்கத்தினுல் அவன் உடலே களங்க மேற்பட்டிருக்கிறது பார்த்தாயா?

**பாலா :**—சுவாமி. தங்களிடத்தில் பேச என்னுல் இயலாது. (சிரிக்கிருள்.)

**விஜ :**—கண்ணே. (இருவரும் கை கோர்த்துப் பாடுகிருர்கள் — பாடி முடிந்தவுடன்.)

**பாலா :**—சுவாமி...இந்தக் கபடர்கள் மத்தியில் நானிருக்க விரும்பவில்லை. (சுற்றிப் பார்த்துவிட்டு) என் தந்தையார் இருப்பிடத்திற்கு...

(தொடரும்)

ஆசிரியர்: கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சிராப்பள்ளி.
அச்சிடுபவரும் வெளியிடுபவரும்: ந. மா. மணி, சிட்டி பிரஸ், திருச்சி.

பதிவு எண் **M. 5484**



ஆசிரியர் : கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சிராப்பள்ளி.
அச்சிடுபவரும், வெளியிடுபவரும்: க. மா. மணி, சிட்டி பிரஸ், திருச்சி.